பதிற்றுப்பத்து விளக்கம் எண்: 3 நான்காம் பத்து

# கமழ் குரல் துழாய்

ஆசிரியர்:

புலவர். கா. கோவிந்தன்,

திருவத்திபுரம்.

வெளியீடு:

எழிலகம்

செய்யாறு 604 407.

எழிலகம் வெளியீடு : எண்: 5
முதற் பதிப்பு: மார்ச்சு 1990


விலை : ரூ. 10-00



கிடைக்குமிடம் :

**சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம்**
T. T. K. சாலை,
ஆள்வார்பேட்டை சென்னை-18.



அச்சிட்டோர் :
**கமலம் பிரஸ்,**
காஞ்சிபுரம்-631501.

# பதிப்புரை

சங்கத் தமிழ்நூல்கள் என்ற சிறப்பினுக்கு உரிய பத்துப் பாட்டு, எட்டுத் தொகை, பதினெண் கீழ்க்கணக்கு என் தொகை வரிசையுல் நடுவண் வைத்து மதிக்கப்பெறுவது எட்டுத்தொகை; அது, நற்றிணை, குறுந்தொகை, ஐங்குறு நூறு, பதிற்றுப் பத்து, பரிபாடல், கலித்தொகை, அகநானூறு, புறநானூறு என்னும் எட்டு நூல்களைக் கொண்டது. அவற்றுள் நான்காவதாகிய பதிற்றுப் பத்து, சேர, சோழ, பாண்டியர் என்ற தமிழ்நாடாண்ட மூவேந்தருள், முதற்கண் வைத்து மதிக்கத்தக்க சேரர்குலக் காவலர் பதின்மர் ஒவ்வொரு-வரையும், பத்துப் பத்துப் பாக்களால், தனித்தனியாகப் பத்து புலவர்கள் பாடிய நூறுபாக்களைக் கொண்ட பெருநூலாகும்; அவற்றுள் இரண்டாம் பத்தும், பத்தாம் பத்தும் காணமற் போகக், கிடைத்திருப்பன எட்டுப் பத்துக்களே.

அவற்றுள் இரண்டாம்பத்தில், இமயவரம்பன் நெடுஞ்-சேரலாதனைக், குமட்டூர் கண்ணனாரும், மூன்றும் பத்தில், பல்யானைச் செல்கெழு குட்டுவனைப், பாலைக் கௌதமனாரும், நான்காம் பத்தில், களங்காய்க் கண்ணி நார்முடிச்சேரலைக்-காப்பியாற்றுக் காப்பியனாரும், ஐந்தாம்பத்தில், செங், குட்டுவனைப் பரணரும், ஆறும்பத்தில், ஆடுகோட்பாட்டுச் சேரலாதனைக், காக்கைப் பாடினியார் நச்செள்ளையாரும், ஏழாம் பத்தில், செல்வக்கடுங்கோ வாழியாதனைக் கபிலரும், எட்டாம் பத்தில், தகடூர் எறிந்த பெருஞ்சேரல் இரும் பொறையை, அரிசில் கிழாரும், ஒன்பதாம் பத்தில், குடக்கோ இளஞ்சேரல் இரும்பொறையைப், பெருங்குன்றூர் கிழாரும் பாடியுள்ளனர். கிடைத்துள்ள எட்டுப் பத்துக்களையும், **பத்துப் பாட்டு விளக்கம்** என்ற வரிசையில், ஒவ்வொரு

பத்திற்குமான விளக்கங்களைத் தனித்தனி நூலாக எழுதி வரிசைப் படுத்தியுள்ளோம்.

அவற்றுள், ஐந்தாம் பத்தின் விளக்கம், **பதிற்றுப் பத்து விளக்கம்; வரிசை மூன்று; கமழ்குரல் துழாய்** என்ற தலைப்பில் புலவர். கா. கோவிந்தன் அவர்களின் நூல், எம் வெளியீடாக வர ஒப்புதல் அளித்தமைக்குப், புலவர்க்கு எங்கள் நெஞ்சார்ந்த நன்றியினைத் தெரிவித்துக் கொள்ளும் அதே நிலையில், புலவர் அவர்களின் நூல்களுக்கு அளித்து வந்த ஆதரவினை, எம் வெளியீடாம் இந்நூலுக்கும் அளித்து, வெளியீட்டுத் துறையில், எம் கன்னி முயற்சிக்கு ஊக்கம் அளிக்க வேண்டுகிறோம்.

—பதிப்பகத்தார்

# முன்னுரை

தமிழ்மொழி இனிமை வாய்ந்தது. 'இனிமையால் இயன்ற இளமகளிர்' என்ற பொருள் பட வந்த "தமிழ் தழீஇய சாயலவர்" என்ற தொடரில் வரும் "தமிழ்" என்ற சொல்லே இனிமை எனும் பொருள் தருவதாகும் எனக்கூறித், தமிழ்மொழிக்குப் பெருந்தொண்டு புரிந்துள்ளார் சீவக சிந்தாமணி என்னும் பெருங்காப்பியப் பேராசிரியர் திருத்தக்கதேவர்.

இனிய சொற்களைத் தேர்ந்து, இனிமையாகச் சொல்லாட விரும்பிய தமிழர், தாம் கூற விரும்பும் ஒவ்வொரு கருத்தும் இனிமையுடைய வாதல் வேண்டும்; இனிக்கும் வகையில் உரைக்கப் பெறுதல் வேண்டும் எனவும் விரும்பினார்கள், அவ்வாறே உரைத்தும் வந்தார்கள்; செந்தமிழ் இலக்கி-யங்கள் அனைத்தும் இச்சிறப்புடையவாகும்.

"உள்ளத்தில் உண்மை ஒளி உண்டாயின் வாக்கினிலே ஒளி உண்டாகும்" என்றார் ஒரு பெரியார். தமிழர்வாக்கு இனிமை வாய்ந்தது என்றால், அவர் உள்ளமும், அவ்வுள்ளம் உந்த உளவாகும் அவர் செயல்பாடும் இனிமை வாய்ந்தனவே ஆகும். இது, உண்மை என்பதைப், பழந்தமிழ் இலக்கியங்கள் காட்டும், படப்பிடிப்பினைக்காணும் வாய்ப்பினைப் பெற்றார் அனைவரும் உணர்வர்.

பலநூறு ஆண்டுகளுக்கு முன்னர் வாழ்ந்த நம் பழம்பெரும் மூதாதையர்தம் பண்பாட்டுப் பெருமையினை, இன்றைத் தமிழரும், பிறரும் அறிந்து கொள்ளுதல் வேண்டும் என்ற அவாவின் விளைவாக, அக்காலப் புலவர் பெருமக்கள், ஆயிரமாயிரம் பாக்களைப் பாடிச் சென்றார்கள். ஆனால், அவர்கள் பாடிச் சென்ற அப்பாக்களின் களஞ்சியத்தைக்,

காக்கத் தவறிவிட்டார்கள் விழிப்புணர்வு அற்ற சிலர் என்றாலும், நம் மூதாதையருள் விழிப்புணர்வோடு இருந்தவர்கள், அழிந்தனபோக அழியா திருந்த அப்பழம் பாக்களை எல்லாம், அரிதின்முயன்று தேடிக் கொண்டார்கள்.

அவ்வாறு தேடிப் பெற்ற அப்பாக்களை ஊன்றிப் பயின்ற புலமைசால் பெரியார்கள் பலரும் ஒன்று கூடி இருந்தும், இப்பாக்களில் பொதிந்து கிடக்கும் பொருள்வளம், அப்பாக்களின் அடி அளவு ஆகியவற்றை, அளவுகோலாகக் கொண்டு, அப்பாக்களையெல்லாம், பத்துப்பாட்டு, எட்டுத் தொகை, பதினெண் கீழ்க்கணக்கு என்ற தலைப்புக்களில் தொகுத்து நமக்கு அளித்துச் சென்றனர். அவ்வாறு தொகுக்கப் பெற்ற தொகை நூல்களில், இரண்டாவது வரிசையில் நிற்பதான எட்டுத்தொகை நூல்களில் இடம் பெற்றிருக்கும் பாக்களின் நலங்களை, நம்கால மக்களும் உணர்ந்து மகிழ வேண்டும் என்ற அவாவினால் உந்தப் பட்ட காரணத்தால் அவ்வரிசையுள், முதற்கண் வைத்துப் பெருமை செய்யப் பெற்றதான நற்றிணையினை, ''நற்றிணை விருந்து'' என்ற தலைப்பிலும், இரண்டாம் நிலைபெற்ற தாயினும், ''நல்ல குறுந்தொகை'' எனச்சிறக்கப் பெற்றதான குறுந்தொகையினைக், ''குறுந்தொகைக் கோவை'' என்ற தலைப்பிலும், ஆறுவது இடம் அளிக்கப் பெற்றதாயினும், ''கற்றறிந்தார் போற்றும் கலி'' என்ற சிறப்பினைப் பெற்றதான கலித்தொகையினைப், ''பாலைச் செல்வி'', ''குறிஞ்சிக்குமரி'', ''மருத நில மங்கை'', ''முல்லைக்கொடி'', ''நெற்தற் கன்னி'' என்ற ஐந்து தலைப்புக்களிலும், முப்பது ஆண்டுகளுக்கு முன்பே விளக்கி வெளியிட்டேன்.

பழந்தமிழர் தொகுத்தளித்த வரிசையிலேயே அவ்வெட்டுத் தொகை நூல் விளக்கங்களையும் அளிக்க வேண்டும் என்

உள்ளம் விரும்பினாலும், சிலபல காரணங்களால், அவ் வரிசை வழிச் செல்ல இயலாமல் போய்விட்டது; இப்போது, அவ்வரிசையுள் நான்காவதாக நிற்பதும், ''ஒத்த பதிற்றுப் பத்து'' என்ற பாட்டினைப் பெற்றிருப்பதுமாகிய பதிற்றுப் பத்தின் விளக்கத்தினை அளிக்க எண்ணினேன்; ஒவ்வொரு தொகுப்பிலும் பத்துப் பத்துப் பாக்களைக்கொண்ட, பதிற்றுப் பத்தில், முதல் தொகுப்பும், பத்தாம் தொகுப்பும் கிடைத்தில; ஆகவே எஞ்சியுள்ள எட்டு தொகுப்புகளின் விளக்கங்களையே அளிக்க முடிந்தது. அவ்வாறு அளிக்கும் நிலையில், ஒவ்வொரு பத்திலும் உள்ள, பத்துப் பத்துப் பாக்களையும் பயின்று, ஒவ்வொரு பாவிலும், அப்பாவிற்குப் பெருமை சேர்க்கும் சிறுதொடரை, அப்பாட்டின் தலைப்பாகக் கொடுத்து பெருமை செய்துள்ளார்கள் நம் பண்டைத் தமிழ்ச்சான்றோர்.

அவ்வாறு அவர்கள் சூட்டியிருக்கும் பெயர்களில், ஒவ்வொரு பத்தின் விளக்கத்திற்கு, அப்பத்தின் முதற் பாட்டிற்குச் சூட்டியிருக்கும் பெயரையே, அப்பத்துப் பாட்டின் விளக்கத்திற்குப் பெயர் சூட்டும் முறையினைப் பின்பற்றி, இம் மூன்றும் பத்தின் விளக்கத்திற்குச் ''கமழ் குரல் துழாய்'' என்ற பெயரைச் சூட்டியுள்ளேன். என் முன்னைய படைப்பு களுக்குத், தமிழகத்துப் பெரியார்களாகிய தாங்கள் காட்டிய பேரன்பையும், பாராட்டையும் இவ்வரிசைக்கும் வழங்கி, மேலும் தமிழ்ப்பணி ஆற்றும் துடிப்புணர்ச்சி, என் உள்ளத்தில் மீண்டும் துளிர்விடத், துணை நிற்க வேண்டுகின்றேன்.

**கா. கோவிந்தன்**

# பொருளடக்கம்

# கமழ் குரல் துழாய்

## பாடிய புலவன்
## காப்பியாற்றுக் காப்பியனார்

செந்தமிழ் இலக்கியம் சிறக்க, செஞ்சுவைச் செய்யுட்கள் பல ஆக்கியும், அவ்விலக்கிய மரபு இனிது நடைபெற இலக்கணம் அமைத்தும், மொழி வளர்த்த முதுபெரும் தமிழ்க் குடிகளுள். காப்பியக்குடியும் ஒன்று. ஒல்காப் பெரும்புகழ் வாய்ந்த தொல்காப்பியப் பேரிலக்கணநூலை ஆக்கி அருளிய ஆசிரியப் பெருந்தகையார் பிறந்த பெருமையுடையது அக் காப்பியக்குடி. எட்டுத்தொகை வரிசையுள், முதற்கண் வைத்து மதிக்கத்தக்க மாண்புமிகு நற்றிணைக்கண் இடம் பெறும் இனிமைமிகு செய்யுட்களைப் பாடிய புலவர் பெரு மக்களுள், ஒருவராய காப்பியஞ்சேந்தனாரைப் பெற்றளித்த பெருமையுடையதும், அக்காப்பியக்குடியே. காப்பியக்குடி, சேர, சோழ, பாண்டியர் குடிகளைப் போலவே, பழமையும் பெருமையும் வாய்ந்த வான் சிறப்புடையது. காப்பியக்குடி-யினர் அந்தணர் குலத்தவராவர் என்று, சிலர் கூறுகின்றனர்; ஆனால் அவ்வாறு கொள்வதற்காம் அகச்சான்று இது என எதையும் அன்னார் காட்டுவாரல்லர். நிற்க; காப்பியக்குடி, ஒரு குடிப்பெயர் அன்று; அஃது ஓர் ஊரின் பெயர். அது, சோழர்களின் பழம்பெரும் கோநகரும், கடல் வாணிகப் பேரூரும் ஆகிய புகார் நகரத்திற்கு, ஏறக்குறைய ஒரு காவத தூரத்தில் இருந்திருத்தல் வேண்டும் என்றும், தஞ்சை மாவட்டம் மாயவரம் வட்டத்தில், இக்காலை இடம் பெற்றிருக் கும் காப்பியக்குடி என்ற சிற்றூரையே, அப்பழம் பதியாகக் கொள்ளினும் இழுக்கில்லை என்றும், தென்னார்க்காடு

மாவட்டத்தில், விழுப்புரத்திற்கு அணித்தாகக், காப்பியாமூர் என்ற ஓர் ஊர் உளது; அஃது இக்காலை கப்பியாமூர் என நெடுமுதல் குறுகி வழங்குகிறது. காப்பியர் பிறந்த ஊராக அதைக் கோடலும் பொருந்தும் என்றும் சில வரலாற்று ஆசிரியர்கள் வகுத்துரைக்கின்றனர். காப்பியர் என்பார், காப்பியக்குடி அல்லது காப்பியாமூர் என்ற ஊரில் பிறந்தமையால், அப்பெயர் பெற்றனர் என்பதாயின், அவர்கள், காப்பியக்குடியினர் அல்லது காப்பியாமூரினர் என்றுதான் வழங்கப் பெறுவரேயல்லது, காப்பியர் என வழங்கப்பெறுவது பொருந்தாது. ஆகவே அப்பெயர், ஊர்ப்பெயரால் வந்ததன்று; காப்பியர் என்ற குடிப்பெயரால் வந்தது என்று கோடலே பொருந்தும்.

காப்பியர் குடிவந்த இக்காப்பியனார், காப்பியாறு என்னும் ஊரில் பிறந்து வாழ்ந்தமையால் காப்பியாற்றுக் காப்பியனார் என வழங்கப் பெற்றுளார். காப்பியாறு, தென் திருவாங்கூர் மாவட்டத்துக், கல்குளம் வட்டத்தைச் சேர்ந்ததாகும் என, இக்காலக் கல்வெட்டு ஆராய்ச்சியாளர் சிலர் கண்டு கூறுகின்றனர். காப்பியாற்றுக் காப்பியனார் தம்பாடல் ஒன்றில், திருவனந்தபுரத்துப் பத்மநாபப்பெருமான் கோயிலைக் குறிப்பதோடு, வடக்குத் தெற்காகக் கிடந்து, மேலைக்கடல் மேகத்தையும், கீழ்க்கடல் கார்முகிலையும் தடுத்துப் பயன் கொள்ளும், மேற்குத்தொடர்ச்சி மலை அமைப்பை அதன் இயற்கை நலம் கெடாவகையில் கூறியுள்ளமை, அவர் பிறந்த காப்பியாற்றைத், தென்திருவாங்கூர் நாட்டினதாகக் கோடுவார் கருத்திற்கு, அரண் செய்வதாக அமைந்துளது.

களங்காய்க்கண்ணி நார்முடிச் சேரலைப் பாடிய, காப்பியாற்றுக் காப்பியனாரின் பாடல்களாகிய, பதிற்றுப்பத்து நான்காம்பத்தின் பாக்கள்பத்தையும் ஊன்றி நோக்கு-

வார்க்குத், திருமாலை வழிபடும் புலவரின் சமயப்பற்று தெற்றென விளங்கா நிற்கும். திருவனந்தபுரத்துத் திருமால் கோயிலில், உலகமே திரண்டு வந்தாற்போல் வந்து குழுமி-யிருக்கும் அடியார்கள், தலைமேல் கூப்பிய கையினராய் அப்-பெருமான் புகழ்பாடும் பாட்டொலியையும், அப்பெருமானுக்கு நிகழ்த்தும் ஆறுகாலபூசனைதோறும் அடித்து எழுப்பும் மணி-களின் ஓசையையும் காதுகுளிரக் கேட்டும், உண்ணாநோன்-பினராய அவன் அடியார்கள், விடியற்போதில் புனலாடி வந்து வழிபடும் காட்சியையும், திருமகள் வீற்றிருக்கும் விரிந்த மார்பில் மணங்கமழும் துளசிமாலை அணிந்து, கையில், ஒளிகாலும் ஆழி முதலாம் ஐம்படை ஏந்தி நிற்கும், திருமாலின் திருவுருவக் காட்சியையும் கண்டும் கவி பாடிக் களித்துள்ளார் புலவர் காப்பியாற்றுக் காப்பியனார்.

''மண்கெழு ஞாலத்து மாந்தர் ஒராங்குக்
கைசுமந்து அலறும் பூசல், மாதிரத்து
நால்வேறு நனந்தலை ஒருங்கு எழுந்து ஒலிப்ப,
தெள்உயர் வடிமணி எறியுநர் கல்லென,
உண்ணாப் பைஞ்ஞிலம் பனித்துறை மண்ணி,
வண்டூது பொலிதார்த் திருஞெமர் அகலத்துக்,
கண்பொரு திகிரிக், கமழ் குரல் துழாய்,
அலங்கற்செல்வன் சேவடி பரவி
நெஞ்சுமலி உவகையர் துஞ்சுபதி பெயர''.

—பதிற்றுப்பத்து 31 : 2 - 10

காப்பியாற்றுக் காப்பியனார், களங்காய்க் கண்ணி, நார்-முடிச் சேரலின் பண்புநலன் பலவும் அறிந்து பாராட்டி-யுள்ளார். பாழிக்கு உரியோனும், பெண் கொலை புரிந்தோனும், ஆகிய, நன்னன் என்பானை வென்று, அவன் பண்டு கவர்ந்து அரசாண்டிருந்த, தன்குலத்தவர்க்குரிய பாழி நாட்டைக், களங்காய்க்கண்ணி நார்முடிச்சேரல் மீட்டுக்-

கொண்ட மாண்புமிகு வெற்றிச்சிறப்பையும், அவன், நெடுமிடல்அஞ்சி என்பானின் கொடுமிடலைச்சாய்த்து, அவன் வளநாட்டைக் கவர்ந்துகொண்ட களங்காய்க்கண்ணியானின் கொற்றத்தையும் அறிந்து பாராட்டியுள்ளார். வண்டன் என்பவன், வரையாது வழங்கும் வள்ளல் ஆவன்; அவன்பால், அவ்வாறு வழங்குதற்கேற்ற விழுநிதியும் குவிந்து கிடந்தது; நார்முடிச்சேரல், வளத்திலும், வழங்கும்குணத்திலும் அவ்வண்டன் அனையன் எனச், சேரனின் சிறப்புரைக்கும் நிலையிலேயே, பிறிதொரு வரலாற்றுண்மையினையும் விளக்கும் விதம், வியந்து பாராட்டற்கு உரித்து.

களங்காய்க்கண்ணி நார்முடிச்சேரலின் நல்லியல்புகள் பலவற்றையும் பாடிப்புகழ்ந்த புலவர் காப்பியனார், அவன் அப்பெயர் பெறுதற்குக் காரணமாய் விளங்கிய நார்முடியின் அமைப்பியலை அழகுற எடுத்துக்காட்டியிருக்கும் திறத்தின் அருமையே அருமை! விளிம்பில் மணிகள் இழைக்கப்பெற்ற ஒரு பொற்கூடு. நார் கொண்டு பின்னப்பட்டுள்ளது அதன் மேற்புறம். புள்ளிகள் நிறைந்த கழுத்தும், சிறிய உடலும் வாய்ந்த அழகிய புருக்கூட்டம், வேடர் தம்மைப்பிடிக்க விரித்து வைத்திருக்கும் வலையோ எனக், கண்டுஅஞ்சுமாறு, இலை உதிர்ந்த வேலமரக்கிளைகளில், சிலந்தி தன்வாய் நீரால் பின்னிவைத்திருக்கும் வலையை நினைப்பூட்டும், பொற்கூட்டின் மேற்புரம் மறையுமாறு பின்னிக்கிடக்கும் நாரின்தோற்றம். பேரொளி வீசும் பருமுத்து வடங்கள், அந்நாரின்மீது கிடந்து அணிதந்து நிற்கும், களங்காய்க்கண்ணியான் அணிந்திருக்கும் நார்முடியின், புலவர் காட்டும் நற்காட்சி இது.

"வாலிதின், நூலின் இழையா நுண்மயிர் இழைய,
பொறித்த போலும் புள்ளி எருத்தின்

புன்புறப் புறவின் கணநிரை அலற
அலந்தலை வேலத்து உலவை அஞ்சினைச்
சிலம்பி கோலிய அலங்கல் போர்வையின்
இலங்கு மணி மிடைந்த பசும்பொன் படலத்து
அவிர் இழை தைஇ, மின் உமிழ்வு இலங்கச்
சீர்மிகு முத்தம் தைஇய
நார் முடி.''

பதிற்றுப்பத்து: 39: 9-17

இவ்வாறு, களங்காய்க்கண்ணி நார்முடிச்சேரலின் நலமெலாம் தோன்றப் பாடிய புலவர், பரிசிற் பொருளாக, நாற்பது நூறுயிரம் பொன் பெற்றதோடு, அவன் அரசியல் வருவாயில் பாகமும் கொண்டு பெருக வாழ்ந்திருந்தார்.

# பாட்டுடைத்தலைவன்
# களங்காய்க்கண்ணி நார்முடிச்சேரல்

வடபேரிமயப் பெருவரையில் விற்பொறித்த விறல்மிக்கோனாகிய இமயவரம்பன் நெடுஞ்சேரலாதனுக்கு, அவன் இளையமனைவி, வேளாவிக்கோமான் பதுமன் மகள் வயிற்றில் பிறந்த மக்கள் இருவருள் ஒருவன், களங்காய்க்கண்ணி நார் முடிச்சேரல். ஒரு தாய்வயிற்றில் பிறந்த இவன் உடன் தோன்றல், ஆடுகோட்பாட்டுச்சேரலாதனாவன். களங்காய்க் கண்ணி நார்முடிச்சேரல் என்ற பெயர், இவன் இயற்பெயரன்று. களங்காயால் கண்ணியும், நாரால் முடியும் ஆக்கி அணிந்து கொண்டமையால் வந்த காரணப் பெயராம். ''முடி சூடுகின்ற காலத்து யாதோ ஒரு காரணத்தால் முடித்தற்குத் தக்க கண்ணியும் முடியும் உதவாமையின், களங்காயால் கண்ணியும், நாரால் முடியும் செய்து கொள்ளப்பட்டன'' என, அவன் அவை சூடியதற்குக் காரணம் கூறுகிறார் பதிற்றுப்பத்தின் பழைய உரையாசிரியர். இவன் ஆட்சிப் பொறுப்பேற்கின்ற காலத்தில், இவன் பகைவர் சிலர், நன்னன் என்பான் துணையோடு, இவனுக்குரிய சேரநாட்டின் ஒரு பகுதியைக் கைப்பற்றி ஆண்டு கொண்டிருந்தாராக, ''இழந்த அந்நாட்டையும் வென்று, என் ஆட்சிக்குரிய அனைத்து நாட்டையும் ஆளும் அந்நாள்வரை, எம் இனத்தார் வழிவழி அணிந்து கொள்ளும் கண்ணியும் முடியும் புனையேன்'' எனச் சூள்உரைத்து, அவற்றிற்கு ஈடாகக் களங்காய்க் கண்ணியும், நார்முடியும் புனைந்து கொண்டமையால், இவனுக்கு இப்பெயர் வந்ததாதல் வேண்டும் என, இக்கால வரலாற்று நூல் வல்லார் சிலர் கூறுகின்றனர். இப்பெரு வேந்தனுக்குப் பெயர் சூட்டவல்ல பெருமை வாய்ந்த அவ்-

விரண்டனுள், நார்முடியின் அமைப்பின் அழகை, இவனைப் பாடிய புலவர் காப்பியாற்றுக் காப்பியனார், தம் பாட்டொன்றில் விளங்கக் கூறியுள்ளார். அது, பாடிய புலவன் தலைப்பில் முன்னரே விளக்கப்பட்டுளது.

களங்காய்க்கண்ணி நார்முடிச் சேரலாதன், நனி இளையனாய் இருந்த காலத்தில், சேரர் பேரரசிற்குரிய பூழி நாட்டை, பாழிக்குரிய நன்னன் என்பான் கவர்ந்து கொண்டான். நார் முடிச்சேரல், சேரர் அரியணை ஏறியதும் முதற்கடமையாக நன்னன் மீது படையெடுத்துச் சென்று, கடம்பின் பெருவாயில், வாகைப் பெருந்துறை முதலாம் இடங்களில் அவனை வளைத்துப் போரிட்டு, அவன் காவல் மரமாம் வாகை மரத்தையும் வெட்டி அழித்து, அவனையும் வெற்றி கொண்டு, பழம்பெரும் உரிமை வாய்ந்த பூழிநாட்டைப் பெற்று மீண்டான். குடிப்புகழ்காத்த, இப்பெருஞ்செயலைக், காப்பியாற்றுக்காப்பியனார், கல்லாடனார் ஆகிய இருபெரும் புலவர்கள் பாராட்டிப் பாடியுள்ளனர்.

''நன்னன், சுடர்வீவாகைக் கடிமுதல் தடிந்த
தார்மிகு மைந்தின் நார் முடிச் சேரல்''

—பதிற்றுப் பத்து: 40: 15-16

''இரும்பொன் வாகைப் பெருந்துறைச் செருவில்
பொலம்பூண் நன்னன் பொருது களத்து ஒழிய
வலம்படுகொற்றம் தந்த வாய்வாள்
களங்காய்க் கண்ணி நார்முடிச் சேரல்
இழந்த நாடுதந்தன்ன வளம்.''

—அகநானூறு: 199

ஔவைக்கு அருநெல்லிக்கனி அளித்த அதியமான் நெடுமான் அஞ்சியின் குலத்து வந்து, நெடுமிடல் எனும்

பெயர் பூண்ட ஒரு குறுநிலத்தலைவன், நெல்வளம் மிக்க நாடுடைமையால் செருக்குற்றுச், சேரநாட்டவரோடு பகை கொண்டானாக, களங்காய்க்கண்ணி நார்முடிச்சேரலாதன், தன் நாற்படைக்குப் பெருமையளிக்கும் யானைப்படையோடு சென்று, அந்நெடுமிடலைக் கொன்று, அவன் நாட்டையும் அழித்தான்.

வெற்றிமிகு வேந்தனாய் வாழ்ந்த களங்காய்க்-கண்ணியான்பால், பாராட்டத்தக்க வேறுபல பண்புகளும் பொருந்தியிருந்தன. பகைபோக்கி வாழ வேண்டும் என்ற பேருள்ளம்கொண்ட அவன், அந்நிலையை எவ்வகையாலேனும் அடைந்து விடுதல் வேண்டும் என்று எண்ணி, அறம் மறந்து அமர்புரிவானல்லன். தோற்று ஓடும் பகைவர்மீது படை-தொடாப் பேராண்மை, தன் படைவீரர் மாட்டும் பொருந்தி-யிருத்தல் வேண்டும் என்பதில், விழிப்பாய் இருந்தான் அவ்வேந்து. போர்மேற்கொண்டு சென்று பகைவர் நாட்டில் பாசறை அமைத்து வாழும் நிலையிலும், அவன் கழிபெரும்-சினங்கொள்ளாது பொறுமையே மேற்கொண்டிருப்பன்.

இவ்வாறு அறவழி ஓம்பும் அறிவுடைப் பெருமகனாய் விளங்கினமையால், அவன், தன் ஆட்சிக்கீழ்வாழும் தன்னாட்டு மக்களின் தளர்ச்சியைப் போக்கி, அவர்களை ஒழுக்கம் மிக்க உயர்ந்தோர்களாக வாழ வைத்து வான்புகழ் பெற்றான். வளமும் வள்ளன்மையும் வாய்க்கப்பெற்ற வண்டனேபோல், தன் படைத்துணையால் வற்றாப்பெருவளம் பெற்றும், அவ்வளத்தை வரையாது வழங்கி வான்புகழ் பெற்றும் வாழ்ந்தான்.

வாழ்வாங்கு வாழ்ந்து வான்புகழ்பெற்ற களங்காய்க் கண்ணி நார்முடிச்சேரலாதன், தன்னைப் பாடிய புலவர்

காப்பியாற்றுக் காப்பியனார்க்கு நாற்பது நூறாயிரம் பொன்னையும், அரசியல் வருவாயில் ஒரு பாகத்தையும் பரிசிலாகக் கொடுத்துப், குன்றாப் புகழ் பெருக, இருபத்தைந்து ஆண்டுகள் அரியணையில் வீற்றிருந்தான்.

## பதிகம்

ஆராத் திருவின் சேரலாதற்கு
வேளாவிக் கோமான்
பதுமன்தேவி ஈன்றமகன், முனை
பனிப்பப் பிறந்து, பல்புகழ் வளர்த்து,
ஊழின் ஆகிய உயர்பெரும் சிறப்பின்
பூழிநாட்டைப் படையெடுத்துத் தழீஇ
உருள்பூங் கடம்பின் பெருவாயில் நன்னனை
நிலைச்செருவி னாற்றலை அறுத்து, அவன்
பொன்படு வாகை முழுமுதல் தடிந்து
குருதிச் செம்புனல் குஞ்சரம் ஈர்ப்பச்
செருப்பல செய்து, செங்களம் வேட்டுத்
துளங்குகுடி திருத்திய வளம்படு வென்றிக்

களங்காய்க்கண்ணி நார்முடிச் சேரலைக், காப்பியாற்றுக் காப்பியனார் பாடினார் பத்துப்பாட்டு. அவைதாம் கமழ்குரல் துழாய், கழையமல் கழனி, வரம்பில் வெள்ளம், ஒண்பொறிக் கழற்கால், மெய்யாடு பறந்தலை, வாள்மயங்கு கடுந்தார், வலம்படுவென்றி, பரிசிலர் வெறுக்கை, ஏவல் வியன்பணை நாடுகாண் அவிர் சுடர்; இவை பாட்டின் பதிகம்.

பாடிப்பெற்ற பரிசில்: நாற்பது நூறாயிரம் பொன்- ஒருங்கு கொடுத்துத், தான் ஆள்வதில் பாகம் கொடுத்தான் அக்கோ.

களங்காய்க்கண்ணி நார்முடிச்சேரல் இருபத்தையாண்டு வீற்றிருந்தான்.

# 1. கமழ் குரல் துழாய்

களங்காய்கண்ணிக் நரர்முடிச் சேரலின் சிறப்பறிந்து அவனைக் காணும் விருப்புடையராகிய புலவர் காப்பியாற்றுக் காப்பியனார், தென் திருவாங்கூர் நாட்டகத்ததாகிய தம் ஊர் விடுத்துச், சேரநாட்டின் தலைநகர் நோக்கிப் புறப்பட்டார் அவ்வாறு புறப்பட்டு வந்தவர், இடைவழியில், பத்மநாபப். பெருமான் கோயில் கொண்டிருக்கும் திருவனந்தபுரத்தைக் காணவே, அந்நகர் புகுந்து அவன் கோயிலை அடைந்தார். சிறியவும் பெரியவுமாய குன்றுகள் ஒருபால்; நின்று காட்சி தர, அலைகள் ஒன்று கூடி, ஓவென ஒலிக்கும் கடல் மற்றொரு-பால் கிடந்து காட்சிதர, மலைவளத்தாலும், கடற்படு செல்வத்தாலும் வளம்சிறந்து வாழ்வுபெறும் மலையாள நாட்டு மாந்தர் அனைவருமே, ஆங்கு ஒன்று திரண்டு வந்து குழுமியிருப்பதைக் கண்டார். குறை போக்கவும், அருள் பாலிக்கவும் வல்லன் அப்பெருமான் என்பதால், அவன் கோயில்நாடி வந்திருக்கும் அம்மக்கட்கூட்டம், தலைமேல் கூப்பிய கையினராய் நின்று பரவும் ஆரவாரப் பேரொலி, உலகின் நால்வேறு திசைநாடுகளிலும் புகுந்து ஒலிக்கும் பேரொலியாய் ஒலித்துக் கொண்டிருந்தது. பத்மநாபப் பெருமானுக்கு அவ்வப்போது நிகழ்த்தும் சிறப்பும் பூசனையும் குறித்து அடித்து எழுப்பும் மணிகளின் தெளிந்தஓசை, அடியார்களின் வாழ்த்தொலியோடு இரண்டறக் கலந்து ஒலித்துக் கொண்டிருந்தது. அவ்வொலி கேட்டு நிறைந்த காதினராய், உண்ணாது கிடந்து உயர்நிலை வேட்கும் உரவோர்கள், கூட்டமாய் வந்து, தண்ணெனக் குளிர்ந்த நீர்த்துறைகளில் மூழ்கி எழுந்து, பெருமான் முன்சென்று, திருமகள் வீற்றிருக்கும் பெருமை வாய்ந்த மார்பில் கிடந்து

காட்சி நல்கும், மணம் நாறும் துளசியைக் கொத்துக் கொத்தாக வைத்துத் தொடுத்த, வண்டுகள் வந்து மொய்க்குமளவு புதுமை நலம் வாய்ந்த, மாலையின் மாண்பையும், கையில் ஏந்தியிருக்கும், காண்பவர் கண்ணொளியைக் கெடுக்குமளவு பேரொளிகாலும் ஆழிப்படையையும் கண்டு களிகூர்ந்து, அப்பெருமான் திருவடியில் வீழ்ந்து வணங்கி, அவன் புகழ்பாடி மனம் நிறைவுற்று மகிழ்வாராயினர். பத்மநாபப்பெருமானையும் வழிபட்டு, அப்பெருமான் பெருமை பாடும் திருக்கோயில் காட்சிகளையும் கண்டு வெளிப்பட்டு, தாம் போகும் வழிமேற்கொண்டார் புலவர்.

சேரநாட்டுப் பெருவழிகளில் சென்று கொண்டிருந்த புலவர், அப்பெருவழிகளில் திருவனந்தபுரப்பெருமானை வழிபட்டு வருவாரும், வழிபடச் செல்வாரும் ஆகிய மக்கட்கூட்டம் மண்டியிருப்பதைக்கண்டார். அம்மக்கள்திரள், இரவென்றும் பகல் என்றும் பாராமல், வழிநடை வருத்தம் தோன்றாமல் செல்வதற்குத் துணைபுரியும் வகையில், முழுத்திங்கள் காரிருள் போக்கிப் பேரொளி பரப்பிக் காய்ந்துகொண்டிருந்தான். அதுகண்டு, வழிச்செல்வார்க்கு விழுத்துணைபுரியும் அவ்வெண்மதியை அவர்வாய் வாழ்த்திற்றாக, அந்நிலையில் ஆங்கு அவரோடு அவ்வழியைக் கடந்து செல்வார்சிலர், "பெரியீர்! இப்பெருவழிகளில் மக்கள் வழங்குவதை முழுமதி நாட்களில் மட்டுமேதான் காணலாகும் போலும் என்று கருதன்மின்; வழிநடைக்கு, நிலவொளியை எதிர்நோக்கி நிற்கும் நிலை, களங்காய்க்கண்ணிநார்முடிச் சேரலாம் நல்லோன் நாடாளும் இச்சேர நாட்டவர்க்கு எந்நாளும் நேர்ந்ததில்லை. அவன் ஆட்சித் திறத்தால், ஆறலைக்கும் கள்வர் அறவே இல்லாயினர்; பெருவழிகளை அவன் பேணிவைத்திருக்கும் சிறப்பால், அவ்வழிகளில் அரவும் புலியும் போலும் கொலைவல்ல, கொடிய உயிர்களைக் காண்பது இயலாது. அதனால்-

முழுநிலா நாளில் மட்டுமேயல்லாமல், அது மறைந்தொழுகும் நாட்களிலும், மக்கள், தங்கள் தங்கள் மனைப்புறங்களில் வழங்குவதைப்போலவே, அச்சம்அற்று வந்து வழிபாடாற்றிச் செல்வர்'' என்று கூறக் கேட்ட காப்பியனார், களங்காய்க்கண்ணியானின் காவற் சிறப்பின் கவின் அறிந்து களிகூர்ந்தார்.

களிக்கும் உளத்தோடு சென்று கொண்டிருந்த புலவர், வானளாவ உயர்ந்து விளங்கும் அந்நாட்டு மலைகள், வடக்கு தெற்காக நீண்டுகிடந்து, மேலைக்கடலில் நீர்குடித்துக் கீழ்த் திசை நாடு நோக்கிச் செல்லும் கார்முகில், கீழ்த்திசைக் கடலில் படிந்து, கருவுற்று எழுந்து, மேலைத்திசைநோக்கி விரையும் மழைமுகில் ஆகிய இருதிசைமேகங்களையும் தடுத்து, அவ்விரண்டினாலும் பயன்பெறுதல் கண்டு வியந்தவாறே அம்மலையிடை வழிகளைக் கடந்து, மாநகர் அடைந்து, மன்னவன் பெருங்கோயில் புகுந்து, அரசவை அணுகி, அரியணைக்கண், அரசமாதேவியோடு அமர்ந்திருக்கும் நார்முடிச்சேரலின் நாளோலக்கச் சிறப்பினைக் கண்ணுற்றார். மன்னன் மாண்புணர்ந்து மகிழும் மனத்தினராய் அம்மன்றம் புகுந்த புலவர் கண்களை, விம்மி உயர்ந்து, பொன் அணிபல பூண்டு பொலிவு பெற்று விளங்கும் அவன் வியன்மார்பே முதற்கண் கவர்ந்தது. தன்ஆட்சிக்கீழ்வாழும் மக்களுக்குப் பசியாலும் பிணியாலும் பகையாலும் வந்துற்ற கேடுகளையெல்லாம் கெடுத்துவிட்டு, அவர்கள், கவலையறியா மனத்தினராகி மாலோன் முதலாம் கடவுளர் உறையும் கோயில் தொறும் சென்று, வழிபடுதல் போலும் உயர்ந்த ஒழுக்க முடையவராய் வாழும் விழுமிய வாழ்க்கைநிலையை வகுத்துத் தந்தும், சேரநாட்டோடு பகை கொண்டிருந்த ஒருசிலரையும் வென்று, அவர் முரசு முதலாம் அரச விருதுகளைக் கவர்ந்து கொண்டு அவர்களைப் பணிகொண்டும், தாளா முயற்சி மேற்

கொண்டிருந்தமையால் மலைபோல் உயர்ந்து விளங்கிய அவன் மார்பு, புலவர்க்கு, இடைவழியில் கண்ட இருதிசை மேகங்களையும் தடுத்துப் பயன்கொண்டு வீழ்ந்துகிடக்கும் மலைக்காட்சியை நினைவூட்டிற்றாக, அம்மார்பால் மாண்புற்ற மன்னனை மனம்ஆர வாழ்த்தி நின்றார்.

மன்னன் மார்புநலம் கண்டு மகிழ்ந்த புலவர், பின்னர் அவன்தோளைக் கண்ணுற்றார். உரம் பெற்றுப் பருத்து, முழவுபோலும் உருப்பெற்ற அத்தோள்கள் இரண்டும், கோட்டை வாயிற்கதவுகளை அடைத்து, அகத்தே இடும் கணைய மரம் போல், அதிலும், வானவர்பால் கொண்ட அச்ச மிகுதியால், அவரால் அழிக்கலாகா அமைப்புடையதும், தாம் செல்லும் இடந்தோறும் உடன் வந்து அரண்அளிக்கும் இயல்புடையதுமாக, அவுணர்கள் ஆக்கி வைத்திருந்த. பறக்கும் கோட்டை வாயிற்கதவிற்கு இட்ட கணைய மரம்போல் காட்சி அளிக்கக்கண்டு, களங்காய்க் கண்ணி நார்முடிச்சேரலின் நல்லுடல் நிலை அறிந்து அகம் மிக மகிழ்ந்தார்.

பரந்து அகன்ற மலைநிகர் மார்பும், பருத்து உயர்ந்த பெரிய தோள்களும் போலும் நல்லுடல் வாய்க்கப்பெற்ற அந்நல்லோன், அத்தோளாற்றல் தந்த துணையால் பெற்ற பெருநிதிக் குவியல்கள், அவனைப்பாடிவருவார் அனைவர்க்கும் வாரி வாரி வழங்கியும் வற்றாது வரைவின்றிப் பெருகியிருக்கக் கண்ட காப்பியனார், இந்நார்முடிச்சேரல், பொருள் வழங்கிப் பெறலாகும் பெரும்புகழ் படைத்தும், வகை வகையான வளம்பல பெற்றும் வாழ்ந்த வண்டன் என்ற வள்ளல் அனையன், வழங்கும் புகழாலும், வற்றாவளத்தாலும் என விழுமிய உவமை கண்டு வியந்து பாராட்டினார்.

களங்காய்க் கண்ணியான், இவ்வாறு கொற்றம் மிக்க கோமகனாய், குடிபுரக்கும் கோல் உடையனாய், நல்லுடல்

பேணும் நலல் உடையனாய், வள்ளலாய், வளம் உடையனாய் வாழ்தல் எவ்வாறோ என எண்ணி எண்ணி வியந்தவாறே, புலவர் காப்பியனார், அரியணையில் அவனோடு அமர்ந்-திருக்கும் அரசமாதேவியாரைக் கண்ணுற்றார். கருந்து அடர்ந்து நீண்ட கூந்தல், அதில் சூட்டப்பெற்றிருக்கும், வண்டுகள் வந்து மொய்க்குமளவு புதுமை நலம் கெடாமுல்லை மலர்கள்; அம்முல்லை மணம் உணர்த்தும் அறவழிக் கற்பு, காதில் அணிந்திருக்கும் குழைகளின் ஒளிக்கு ஈடுகாட்டும் பேரொளி காலும் நெற்றி; கழுத்திலும் கைகளிலும் கிடந்து ஒளிவீசும் பொன்னணிகளின் நிறத்தோடு, போட்டியிடும் பொன்மேனி; இத்தகு நலத்தோடு நார்முடிச்சேரலின் மனைக்கு விளக்காய், மனையற மாட்சியுடையராய் விளங்கும் அரசமாதேவியார், வானவர் மகளிரிற் சிறந்த மாண்புடை-யாள் என மதிக்கத்தக்களாய், செவ்வொளிவீசும் விண்மீன் உருவில் வழங்குபவளாகிய அருந்ததியை நிகர்ப்பர். "யாண்டு பலவாக, நரையில ஆகுதல், யாங்கு ஆகியர் என வினவுதிராயின், மாண்ட என் மனைவியொடு மக்களும் நிரம்பினர்", "இல்லது என் இல்லவள் மாண்பானல்" என்ற புலவர்களின் பொருளுரைகள் உணர்த்தும் உண்மை-போல், அரசமாதேவியார்பால் அமைந்து கிடக்கும் இந்நிறை-வுடைமையே, நார்முடிச் சேரலின் பெருவாழ்விற்குப் பெருந்-துணையாம் என்பதறிந்து அரசமாதேவியாரையும் வாழ்த்தினார் புலவர்.

கோப்பெருந்தேவியாரை வாழ்த்தி நிற்கும் அதே நிலையில், புலவர் காப்பியாற்றுக் காப்பியனார் கருத்தை, அரசவையில், அரசியார்க்கு அடுத்த நிலையில் அமர்ந்திருந்த ஐம்பெருங்குழுவினர் ஈர்க்கவே, அவர் அவர்களை நோக்கினார். அவரிடையே அமர்ந்திருந்தான், சேர நாட்டின் ஏனாதி பட்டம் பெற்ற பெரும்படைத் தலைவன். நார்முடிச் சேரலின்

போர் முரசு, வெற்றிமிகு போர்குறித்து முழங்குமேயல்லது, வையத்தார் கேட்டு நடுங்குக என வறிதே முழங்குவது இல்லை. அதனால், போர் முரசின் ஒலி கேட்டதும், காலில் கழல் புனைந்து, தலையில் பனைமாலை அணிந்து, கையில் கூர் வேல் ஏந்தி களம் புகுந்து விடும் சேரநாட்டின் பெரும் படைக்குத் தலைமை தாங்கும் தனிச்சிறப்பு வாய்ந்த அப் படைத் தலைவன், அப்படைவன்மை கண்டு அஞ்சி அடிபணியக் கருதாது, எதிர்த்து நிற்பவர் மீது பாய்ந்து அழிப்பனேயல்லது, போரில் தோற்றுப் புறமுதுகு காட்டி ஓடும் படைவலம் இழந்தார்மாட்டு படைதொடாப் பேராண்மையுடையவன், அறவழி போர்புரியும் ஆண்மை யாளன் என்பதும், சேரநாட்டு அரசோடு நட்புறவு கொண்ட நாட்டவர்க்கு, நல்ல துணையாய் நின்று அவரைக் காக்கவும், மாறாக அச்சேரநாட்டவரோடு பகைகொண்டு வாழ்வார்க்கு, அன்னார் எத்துணைப் படைவலம் பெற்றவராயினும், அவர்க்குத் துணைபுரியும் அரண் எத்துணைத் திண்ணியதேயா-யினும், பெருங்கேடு புரியவல்லதுமாகிய நாற்படையே அவன் கீழ்ப் பணிபுரிகிறது என்பதும் அறிந்தார்; அளவிலா மகிழ்ச்சி யில் ஆழ்ந்தார்.

ஆக, நல்லுடல், நிறைந்த புகழ், குறைவிலாப் பெரு வளம், மனையறமாண்புமிக்க மனைவி, பெரும்படை, அறப் போர் காணும் பெரும்படைத் தலைவன், என்ற அனைத்து நிலை யாலும் சிறந்து விளங்கும் சேரலாதன் மாண்பு கண்டு மருண்டு நின்றார் புலவர்; அவர் அகத்தே மலர்ந்ததுஓர் அழகியபாடல்.

துளசி மாலையின், தனித்தனி இதழ்களாகத் தொடுக்கப் பெறுமல், கொத்துக் கொத்தாகத் தொடுக்கப் பெற்றிருக்கும் சிறப்பையும், மலராக இல்லாமல் சின்னஞ்சிறு இலைகளாகவே இருக்கவும், மணம் கமழும் மாண்பையும் ஒருங்கே புலப்-படுத்தும் **கமழ் குரல் துழாய்** என்ற தொடரின் நயம்

கண்டு வியந்து, அத்தொடர் அமைய ஆக்கிய அப்பாட்டிற்கு, அத்தொடரையே பெயராகச் சூட்டிய பெரியாரின் புலமை நலம் கண்டு பாராட்டுவோமாக.

31. ''குன்றுதலைமணந்து குபூஉக் கடல் உடுத்த,
மண்கெழு ஞாலத்து மாந்தர் ஒராங்குக்
கைசுமந்துஅலறும் பூசல் மாதிரத்து
நால்வேறு நனந்தலை ஒருங்கு எழுந்து ஒலிப்பத்,
தெள்உயர் வடிமணி எறியுநர் கல்லென,
உண்ணுப்பைஞ்ஞிலம், பனித்துறை மண்ணி
வண்டுது பொலிதார்த் திருஞெமர் அகலத்துக்
கண்பொரு திகிரிக், **கமழ்குரல் துழாய்**
அலங்கற் செல்வன் சேவடி பரவி,
நெஞ்சுமலி உவகையர் துஞ்சுபதி பெயர,
மணிநிற மைஇருள் அகல நிலாவிரிபு
கோடுகூடு மதியம் இயல் உற்றுங்குத்
துளங்குகுடி விழுத்திணை திருத்தி முரசுகொண்டு
ஆண்கடன் இறுத்த நின்பூண்கிளர் வியன் மார்பு
கருவி வானம் தண்தளி தலைஇய
வடதெற்கு விலங்கி, விலகு தலைத்து எழிலிய
பனிவார் விண்டு விறல்வரை அற்றே.
கடவுள்அஞ்சி வானத்து இழைத்த
தூங்குஎயில் கதவம் காவல்கொண்ட
எழுஉ நிவந்தன்ன பரேர் எறுழ் முழவுத்தோள்,
வெண்திரை முந்நீர் வளைஇய உலகத்து
வண்புகழ் நிறுத்த வகைசால் செல்வத்து
வண்டன் அனையமன் நீயே; வண்டுபட
ஒலிந்த கூந்தல் அறஞ்சால் கற்பின்
குழைக்கு விளக்காகிய ஒண்ணுதல், பொன்னின்
இழைக்கு விளக்காகிய அவ்வாங்கு உந்தி,

விசும்பு வழங்கு மகளிர் உள்ளும் சிறந்த
செம்மீன் அனையள் நின் தொன்நகர்ச்செல்வி:
நிலன் அதிர்வு இரங்கலவாகி வலன் ஏர்பு
வியன்பணை முழங்கும் வேல்மூசு அழுவத்து
அடங்கிய புடையல் பொலங்கழல், நோன்தாள்,
ஒடுங்காத் தெவ்வர் ஊக்கறக் கடைஇப்
புறக்கொடை எறியார் நின் மறப்படை கொள்ளுநர்.
நகைவர்க்கு அரணம்ஆகிப், பகைவர்க்குச்
சூர்நிகழ்ந்தற்று நின்தானை;
போர்மிகு குருசில்! மாண்டனை பலவே''.

**துறை : செந்துறைப் பாடாண் பாட்டு**
**வண்ணம் : ஒழுகு வண்ணம்**
**தூக்கு : செந்தூக்கு**
**பெயர் ! கமழ்குரல் துழாய்**

மாந்தர் அலறும் பூசல் ஒலிப்ப, மணி எறியுநர் கல்லென, பைஞ்ஞிலம், மண்ணி, சேவடிபரவி, உவகையர் பதிபெயர, மதியம், இருள் அகல நிலாவிரிபு இயலுற்றுருங்கு, திருத்தி, கொண்டி இறுத்த நின் மார்பு, வரை அற்று தோள் எபூஉ நிவந்தன்ன. நீ வண்டன் அனையை; செல்வி செம்மீன் அனையள்; நின் மறப்படை கொள்ளுநர் புறக்-கொடை எறியார். தானை சூர் நிகழ்ந்தற்று. நீ பல மாண்டனை என வினை முடிவு கொள்க.

குன்று தலைமணந்து — மலைகள் பல தொடர்ந்து. குபூஉக் கடல் உடுத்த = அலைகள் ஒன்று திரண்டு ஓவென முழங்கும் கடலை ஆடைபோல் சூழக்கொண்ட. மண்கெழு ஞாலத்து = மண்ணால் ஆன இந்நிலவுலகத்தைச் சேர்ந்த. மாந்தர் = மக்கள். ஓராங்கு கை சுமந்து அலறும் பூசல் — ஒன்றுகூடி-

யிருந்து, தலைமேல் குவிந்த கையினராயப் பாடிப் பரவும் ஆரவாரம். நால்வேறு மாதிரத்து நனந்தலை = நான்காக வேறுபட்ட திசைகளாகிய பரந்த நிலம் முழுவதும். ஒருங்கு எழுந்து ஒலிப்ப = ஒன்றுகத்திரண்டு எழுந்த ஒலிக்க. தென் உயர் வடிமணி எறியுநர் = தெளிந்த ஓசையும், சிறந்த தொழில்வளம் அமைந்த மணிகளை இயக்குபவர். கல்லென = கல்லென ஓசை எழுமாறு இயக்க. உண்ணுப் பைஞ்ஞிலம் = உண்ணுநோன்பு மேற்கொண்ட உலகத்து உயர்ந்தோர். பனித்துறை மண்ணி = குளிர்ந்த தண்ணீர்த் துறைகளில் நீராடி. வண்டு ஊது பொலிதார் = வண்டுகள் வந்து மொய்க்குமளவு புதுமையும் பொலிவும் வாய்ந்த மலர்களால் ஆன மாலையும், திருஞெமர் அகலத்து = திருமகள் விரும்பி வீற்றிருக்கும் மார்பும். கண்பொருதிகிரி = காண்பவர் கண்ணொளி கெடுக்கவல்ல பேரொளிசாலும் ஆழிப்படையும். கமழ் குரல் துழாய் அலங்கல் = மணங்கமழும் கொத்தாகிய துளசியாலான மாலையும் உடைய. செல்வன் சேவடி பரவி = திருவனந்தபுரத்துப் பெருமான் திருவடிகளை வணங்கி வாழ்த்தி. நெஞ்சுமலி உவகையர் = மனம் நிறைந்த மகிழ்ச்சி உடையராய். துஞ்சு பதி பெயர = தத்தம் வாழிடங்கட்குத் திரும்பிச் செல்ல. கோடுகூடு மதியம் = இருபக்கமும் நிரம்பிய முழுத்திங்கள், மணிநிற மை இருள்அகல = நீல மணியின் நிறம் போலும் கரிய இருள் அகலுமாறு. நிலாவிரிபு இயலுற்றுங்கு = நிலவைப் பொழிந்து உலாவருதல் போல். துளங்கு குடி விழுத்திணை திருத்தி = தளர்ந்த குடிகளின் தளர்ச்சியைப் போக்கி, அவர்தம் சிறந்த ஒழுக்கத்தைச் செம்மையுறப் பண்ணி. முரசு கொண்டு = பகைவர்களின் போர் முரசு முதலாம் அரசவிருதுகளைக் கைக்கொண்டு, ஆண்கடன் இறுத்த = ஓர் ஆடவன் செய்ய வேண்டிய கடமைகளைச் செய்து முடித்த. நின் பூண் கிளர் வியன் மார்பு = பொன்னாரம்பூண்ட உன் அகன்ற மார்பு.

கருவி வானம் தண்தளி தலைஇய = இடியும் மின்னலும் போலும் கருவிகளைக் கொண்ட மேகம் பெய்த குளிர்ந்த மழையை. வடதெற்கு விலங்கி = வடக்கு தெற்காகக் குறுக்கிட்டு கிடந்து. விலகு தலைத்து எழிலிய = தடுத்த முடிகளை உடையதாய் எழுந்துள்ள. பனிவார் விண்டு விறல் வரைஅற்று=குளிர்ந்த பெரிய மலையை ஒப்பதாகும். பரேர் எறுழ் முழவுத்தோள் = பருத்த அழகிய வலிமை மிக்க முழவு போலும் உன்தோள்கள். கடவுள் அஞ்சி = வானவர்க்கு அஞ்சி. வானத்து இழைத்த தூங்கு எயில் கதவம் = அவுணர்கள் ஆகாயத்தில் கட்டியிருந்த தூங்கு எயிலின் வாயிற் கதவிற்கு. காவல் கொண்ட எழூஉ நிவந்தன்ன = காப்பாக இட்ட கணையமரத்தைத் தூக்கி நிறுத்தினாற் போன்று உள்ளன. நீ = நீ. வெண்திரை முந்நீர் வளைஇய உலகத்து = வெண்ணுரை தெறிக்கும் அலைகளையுடைய கடல் சூழ்ந்த இவ்வுலகத்தில். வண்புகழ் நிறுத்த = வளமார் புகழை நிலை பெறப் பண்ணினவனும். வகைசால் செல்வத்து = வகை வகையான செல்வங்களைப் படைத்தவனுமாகிய. வண்டன் அனையை மன் = வண்டன் என்பானைப் பெரிதும் ஒத்திருக்கின்றாய். வண்டு பட ஒலிந்த கூந்தல் = வண்டுகள் வந்து மொய்க்குமாறு தழைத்த கூந்தலும். அறம் சால் கற்பின்= அறம் நிறைந்த கற்பும். குழைக்கு விளக்காகிய ஒண்ணுதல் =காதணியாம் குழையின் ஒளிக்கு விளக்கத்தை வழங்கவல்ல ஒளிவாய்ந்த நெற்றியும். பொன்னின் இழைக்கு விளக்காகிய அவ்வாங்கு உந்தி = அணிந்திருக்கும் பொன்னால் ஆன அணிகளின் ஒளிக்கு விளக்கம் தரவல்ல பொன்னிறம் பெற்ற, அழகிய, வளைந்த உந்தி போலும் உறுப்புகளால் நலங்கொண்ட மேனியும் உடைய. நின்தொல் நகர்ச் செவ்வி = உன் பெருமனைக்கிழத்தி. விசும்பு வழங்கு மகளிருள்ளும் = வானலகத்து மகளிர் உள்ளும். சிறந்த சிறந்தவளான. செம்மீன் அனையள் = செவ்வொளி வீசும்

விண்மீன் வடிவினளாகிய அருந்ததி அனையள். நின் மறப்படை கொள்ளுநர் = மறம் மிக்க உன் நாற்படைக்குத்தலைமை தாங்கும் படைத்தலைவர். வியன்பணை = பெருமை வாய்ந்த போர் முரசு. நிலன் அதிர்பு இரங்கலவாகி = உலகத்தவர் கேட்டு வாளா நடுங்குமாறு வந்தே முழங்காது. வலன் ஏர்பு முழங்கும் = வெற்றி குறித்து முழங்கா நிற்கும். வேல்மூசு அழுவத்து=வேற்படை திரண்ட போர்க்களத்தில். அடங்கிய புடையல்=கட்டிய போர்ப்பூமாலையும். பொலங்கழல் = பொன்னால் பண்ணிய வீரக்கழல்புனைந்த. நோன்தாள்= வலிய கால்களும் உடைய. ஒடுங்காத்தெவ்வர் = நின் ஆற்றல் கண்டு அஞ்சி அடங்காத பகைவர்களின். ஊக்கு அறக் கடைஇ = ஊக்கம் கெட்டழியுமாறு படைக்கலங்களை ஏவி. புறக்கொடை எறியார்=தோற்றோடும் பகைவர் முதுகில் படைதொடுத்து அறியார். நின் தானை = உன் நாற்படை. நகைவர்க்கு அரணம் ஆகி=அன்பு காட்டும் நண்பர்க்கு அரண் அளிப்பதாகி. பகைவர்க்குச் சூர் நிகழ்ந்தற்று = பகைவர்க்கு, அடாது செய்தாரை ஒறுத்து அழிக்கும் அணங்குபோலாம். போர்மிகு குருசில் நீ = போர்க்களத்தே வெற்றியால் வீறுகொள்ளும் விழுமியோனாகிய நீ. பல மாண்டனை=இவ்வாறு பலவகையாலும் மாட்சி பெற்றுள்ளாய்.

சேரநாடு அல்லது பிற சிறிய பெரிய நாடுகளுக்கு உரியராகிய அரசர் கூட்டம், களங்காய்க்கண்ணி நார்முடிச்சேர வேந்தனால் அல்லது, தம் பெரும்படையாற்றல்களால், தம் நாட்டிற்கு வர இருக்கும், வந்திருக்கும் கேடுகளைப் போக்குவது இயலாது என்ற உணர்வு வரப்பெற்று, சேரர் தலைநகர்வந்து, சேரவேந்தனைப் பணிந்து, அவன் துணை பெற்றுக்கொண்ட மனநிறைவோடு, தத்தம் நாடடைந்து இனிது வாழ்வர். சேரவேந்தனின் இச்சிறப்பை எடுத்துக்

கூறிப் பாராட்ட நினைத்த புலவர், அதை வெளிப்படக்கூறாது, ஒருபால் கடலையும், ஒருபால்மலையையும் எல்லையாகக் கொண்ட சேரநாட்டு மக்களெல்லாம், சேரநாட்டுத்தலைநகராம் திருவனந்தபுரத்தில் கோயில் கொண்டிருக்கும் திருமாலின் திருவருளால் அல்லது, மருந்தாலும், மந்திரத்தாலும், வேறு தம் முயற்சிகளாலும், தமக்குற்ற இடர்நிலையைத் தீர்த்துக் கொள்வது இயலாது என்பதறிந்து, சேரர்தலை நகர்க்கண் வந்து குழுமி, அப்பெருமானை வழிபட்டு, அவன் அருள் கிடைத்த மனநிறைவோடு தம் வாழிடம் செல்லும் சிறப்பைக் கூறிய முகத்தான் விளக்கும் சிறப்பு பாராட்டிற்குரியது.

திங்களின் இருகோடுகளும் கூடிய நிலையை முழுமதி என்றும், இருகோடுகளும் பிரிந்து காட்சி அளிக்கும் நிலையைப் பிறைமதி என்றும் வழங்கும், "கோடு கூடு மதியம்" (புறம் : 67 : 4; பதிற்றுப்பத்து : 31 : 12) "இரு கோட்டு ஒருமதி" (நக்கீரர் : திருவெழுகூற்றறிக்கை) தொடர்களைக் காண்க.

தோற்றோடும் பகைவர் முதுகில், படைக்கலம் பாய்ச்சு-வதையும், போரில் புறத்தே புண் பெறுவதையும் பழிமிகு-செயலாகக் கொள்வர் சிறந்த வீரர்.

"நன்னடை நல்கல் வேந்தற்குக் கடனே" என்பதற்-கேற்ப, தம் குடிமக்களின் குறைபோக்கி, அவர்களை நல்லவர் ஆக்கிய, அரசர்கடனைக், குறைவற நிறைவேற்றியவன் என்பது உணர்த்த. "ஆண் கடன் நிறுத்த" எனக் கூறியுள்ளார்.

# 2. கழையமல் கழனி

களங்காய்க்கண்ணிநார்முடிச்சேரல், ஓர் ஒப்பற்ற பெரு-வீரன். போர்க்களத்தில் அவன் பேராண்மையே சிறந்து விளங்கும் என, அவன் ஆற்றல் ஒன்றை மட்டுமே, தொடக்கத்தில் அறிந்திருந்தார் புலவர் காப்பியாற்றுக் காப்பியனார். ஆனால் அவன் அரசவைக்கண் அமரும் வாய்ப்பு கிடைக்கப் பெற்று, அவனோடு நெருங்கிப் பழகப்பழகப் புலவர்க்கு அவன்-பால் பொருந்திக் கிடக்கும் பண்புகள் பலவும் புலப்படலாயின.

அன்பு, நாண், ஒப்புரவு, கண்ணோட்டம், வாய்மை என்ற ஐம்பெரும் பண்புகளாம் பெருந்தூண்கள் தாங்கி நிற்கும் சான்றாண்மையினைச், சாலவும் பெற்றிருக்கும் அவன் சிறப்-பினையும், நடுநிலை பிறழா நல்லாட்சி நடாத்தும் அவன் நலத்தினையும், நால்வேறு திசையில் உள்ளாரும் ஒரு சேரப் பாராட்டும் பெருமையினைக் கண்டார் புலவர் காப்பியனார். அம்மட்டோ!

பாணர் பொருநர் புலவர் போலும் இரவலர்கள், நாள்-தோறும் வந்து வாயிற்கண் நின்று வாழ்த்துரை வழங்கு-வராதலின், அவர்க்குப், போதும்போதும் எனக்கூறிமறுக்கு-மளவான மாநிதிகளை வாரிவாரி வழங்கவல்ல வளம், தன் அரசியல் பண்டாரத்திற்கு உண்டாக வேண்டுமே என்ற உயர்பேருள்ளம் உடையவனாகிய அவன், அப்பெருவளம் தருவான் வேண்டி, வளம் கொழிக்கும் எல்லைநாடுகள்மீது ஓயாது போர்தொடுப்பன். அவன் கருதுவதனையே அவன் நாற்படையும் கருதுமாதலின், அவனைத் தம்கூடத்திற்கு அணித்தாகக் கண்ணுற்றதும், முத்துப்படுமளவு முதிர்ந்த

கோடுகளை உடையவாகிய இளைய போர்க்களிறுகள், போர் வெறிகொண்டு பிளிறத் தொடங்கிவிடும். படையின்முன் வரிசையில் பணிபுரியும் இளம்வீரர்கள், தம்தோள்தினவு தீரும் வாய்ப்பு வந்துற்றது எனும் நெஞ்சுநிறைவுடையராகி எல்லைப்புற நாடுநோக்கி விரைவர். அவ்வாறு புகுந்த அவனும், அவன் நாற்படையும் ஆங்குத் தம் ஆற்றல் அனைத்தையும் காட்டி அருஞ்சமர் புரிந்து பெருவெற்றி பெறுவர். அதன் பயனாய்ப் பெற்ற, பொன்னும் பொருளும் போலும் பெரு வளத்தைத், தன்னைப் பாடியவாறே தன்னைத் தொடர்ந்து வரும் பரிசிலர்க்கு, அவரும் அவர் சுற்றமும் மகிழ்ந்து மனம் நிறைவுடையவராகிப் போதும்போதும் எனக் கூறி மறுக்குமளவு வாரிவாரி வழங்குவன். அவ்வாறு வழங்கிய பின்னரும், ஈட்டிவைக்க இடம் காணாதபடிப் பெருகிக் கிடக்கும் அப்பெருவளப் பெருமையைப், பாரோர் அனைவரும் பாராட்டி நிற்பதையும், புலவர் பார்த்து மகிழ்ந்தார்.

மணிமுடிசூடி மன்னனாகும் முடிசூட்டு விழா நாளன்று, தான் சூடுதற்குரிய மணிமுடியும், பனந்தோட்டுக்கண்ணியும் கிடைக்காமற் போகத்தக்க தளர்நிலை, தன்குடிக்கு நேர்ந்த-தாகவும், நார்முடியும், களங்காய்க்கண்ணியும் கொண்டு முடிசூட்டு விழாவினைக் குறைவின்றி முடித்து, அத் தளர்ச்சியைப் போக்கி, அரியணையில் உரிமையுடன் அமர்ந்து, தான் பிறந்த குடிப்பெருமையைக் குன்றின்மேல் இட்ட விளக்கெனப் பெருக்கிக் காட்டியும், தன் ஆட்சிக்கீழ் வாழ்வோரின் குடிநிலைதளரின், அத்தளர்ச்சிக்காம் காரணம் அறிந்து, அதைக் கடிதின்போக்கி, அக்குடிகளைக் வாழ வைத்தும் நல்லது புரியும் நார்முடியான் நற்பண்பையும் புலவர் அறிந்து கொண்டார்.

இவ்வாறு, அரசவைக்கண் அமர்ந்து, ஆர இருந்து, அவன் அரும்பெரும் புண்புகளையெல்லாம் நிரலே நினைந்து நினைந்து எத்தனை என எண்ணிப் பார்க்கத் தலைப்பட்டார் புலவர். ஆனால் புலவர்க்கு அது இயலாது போயிற்று. எண்ண எண்ண அவன் பெருமைகள் எண்ணுள் அடங்காது வளர்ந்து பெருகுவதல்லது எண்ணின் வரையறைக்குள் அடங்கிற்றிலது. நிரலே எண்ணிக்காணல் இயலாது. அதற்கு எண் கிடைக்காது என உணர்ந்த புலவர், ஒரு பேரெண்வரை ஒருமுறை எண்ணியதும், ஒருமுறை எண்ணியது முடிந்தது என்பதை உணர்த்த ஒரு கழற்சிக்காயை இடுவது என்ற எண்ணுமுறையைப் பின்பற்றி எண்ணத் தொடங்கினார்; அப்போதும் பயன் கிட்டாதாயிற்று. எண்ணு முறைகாண இட்ட கழற்சிக்காய்களை எண்ணிக் காண்பதே இயலாதாயிற்று. ஆகவே, களங்காய்க்கண்ணியானின் பெருமைகளை எண்ணிக் காண்பது இயலாது, என்பதை அறிந்து, அப்பயனில் முயற்சியை அறவே கைவிட்டு, நார்முடிச்சேரலின் பண்பும் பெருமையும் எத்துணைப் பெரியன ! எத்துணைப் பாராட்டிற்குரியன என நினைந்து நினைந்து நெஞ்நிறை மகிழ்வெய்துவதும், மாளா வியப்புறுவதுமாக வாழ்ந்திருந்தார் புலவர்.

அந்நிலையில், அவன்பால் அமைந்துகிடந்த மற்றொரு மாண்பினையும் உணர்ந்து கொள்ளும் வாய்ப்பு புலவர்க்கு உண்டாயிற்று; அதுஉண்டாக, அம்மாண்புணர்ந்தபோது புலவரின் வியப்பும் ஓர் எல்லைக்குள் நில்லாது விரிந்து பெருகுவதாயிற்று. தகடூர் ஆண்ட அதியமான்நெடுமான் அஞ்சியின் வழியில் வந்த நெடுமிடல்அஞ்சி என்பான் ஒருவன், அக்காலத்து வீரர் அனைவரினும் சிறந்து விளங்கினான். தஞ்சை நாட்டு நீடூர்க்குரியோனாகிய வேளிர்குலத் தலைவனும் எவ்வி என்பானோடு பகைகொண்டு, அவனை எதிர்த்த பசும்பூண்

பொருந்திலர் என்பாரின் போர் வெறிகண்டு பொருது, அவரை அரிமணவாயில் உறத்தூரில் வளைத்துப் போரிட்டு வாழ்விழக்கப் பண்ணிய வீறுடைமையால், பரணர் பாராட்டையும் பெற்ற பெருவலி படைத்தவன் அவ்அஞ்சி. அத்தகு ஆற்றல் உடைமையோடு அவன்பால், வளம் மிக்க நாடு ஒன்றும் இருந்தது. நீண்ட பெரிய கால்களையுடைய நாரைகள் நீருட்புகுந்து தாம் விரும்பும் இரையாகிய மீன்களைத் தேடுமளவு நீர்வளம் மிக்க நஞ்செய்களில், மூங்கில் தண்டுகளோ என மருளத்தக்க தாள்களைக் கொண்ட நெற்பயிர் ஈன்றகதிர்களும், தம்நிறை பொறுக்கமாட்டாது தலைமடங்கித் தரையில் சாய்ந்து கிடக்குமாம். அத்துணைப் பெருவளத்தை ஆண்டுதோறும் தப்பாது அளிக்கவல்லது அவன் நாடு. இவ்வாறு வளமும் வன்மையும் ஒருசேர வாய்க்கவே. அந்நெடுமிடல் அஞ்சியும், அவன் நாட்டவரும், பழிமிகும் அழிவுத் தொழில் புரிவதில் ஆர்வமுடையவராகி விட்டனர். மக்கள் என மதிக்கத்தக்க மாண்பு, அவர்பால் நில்லாது அகன்று விட்டது. எங்கும் எப்போதும் பழிதரு செயல்களே புரிவது, எவரைக் காணினும் வசை மொழியே வழங்குவது என்ற வழக்குடையராகி விட்டார்கள்.

நெடுமிடல் அஞ்சியின் இந்நிலைக்கண்டு, நார்முடிச்சேரல் கடுஞ்சினம் கொண்டான். அவனை வென்று அடக்க வேண்டுவது இன்றியமையாதது என்பதை உணர்ந்தான். அவ்வுணர்வு பிறந்த அன்றே, அவன் நாற்படை அந்நாட்டுள் சென்று பாசறை அமைத்தது. நெடுமிடல் அஞ்சியின் நாடு புகுந்து, அந்நாடடின் நிலையினை நேரில் கண்ணுற்றதும், நார்முடிச்சேரல், நெடுமிடலைக் கேடேபுரியும் கொடியோனாக்கியது, அவன் நாட்டின் நிலநீர்வளங்களே; அவ்வளம் வறண்டுவிட்டால், அவன் ஆற்றவும் நல்லோனாகிவிடுவான் என்பதை உணர்ந்தான். உடனே, அவ்வளங்களைப் பாழ்-

பண்ண வேண்டிய பெரும்பணியைத் தன் களிற்றுப் படையாளர்பால் ஒப்படைத்தான். உடனே, நெல் விளைந்து கிடக்கும் நஞ்செய்களிலும், உண்ணுநீராகவும், மண்ணு நீராகவும் உறுபயன் அளிக்கும் தண்ணீர்த்துறைகளிலும் களங்காய்க்கண்ணியானின் களிறுகள் புகுந்துவிட்டன. அவ்வளவே அத்துணைவளமும் அரைநாழிகைப் போழ்தில் அறவே அழிந்து தரைமட்டமாயின.

நாட்டின் அழிவுகண்டு வெகுண்ட அந்நாட்டவர், களங்காய்க்கண்ணியான் மீது வசைமாரிப் பொழிவாராயினர். அவ் வளவையும் கேட்டான் அவன். ஆனல், அதற்காக அவர்பால் சினம் கொண்டிலன். நினைத்தால் ஒரே நாழிகையில், இருந்த இடம் தெரியாதபடி உருக்குலைத்துவிடவல்ல பெரும் படையோடு வந்திருந்தும், வசைபொழிவாரின் நிலைக்கு வருந்துவதல்லது சினவாதிருக்கும் சேரலாதன் சிறப்பினைப் புலவர் கண்டார். சினம், அரசரோடு உடன் பிறந்தது என்ப. அங்ஙனமாகவும், படைவலியோடு வந்திருக்கும் தன்னைத், தன்காதுகேட்க வசைபொழியக் கண்டும், வெகுளா திருக்கின்றனன் என்றல், புலவரால் அவன் பெருமைகண்டு வியக்காதிருக்க ஒண்ணுமோ? காவலர்பால் காணக்கூடாத அப்புதுமையை அக்காவலன்பால் காணவே, காப்பியாற்றுக் காப்பியனர், தாம்கொண்ட வியப்பு மேலீட்டால், "வேந்தே! உம்பால் பொருந்தியிருக்கும் இப்பெருநலம் கண்டு மருண்டே போனேன் வாழ்க அம் மாண்பு" என வியந்து நோக்கி வாழ்த்தி நின்றார்.

அவர் வழங்கிய அவ்வாழ்த்துறையுள், நெல்லின் தண்டிற்குத், தாள்என்பதே பெயராகவும், அதனை வழங்காது, அளவுமீறிப் பருத்திருக்கும் அதன் பருமை கண்டு வியந்து, அதைக் கழை என்றே பெயரிட்டழைத்துள்ள பெருமைகண்டு

பாநலம் உண்டு உளம் நிறைந்த பெரியார் ஒருவர் அப் பாவிற்குக் **கழை அமல் கழனி** என்ற தொடரையே பெயராகச் சூட்டிப் பெருமை செய்துள்ளார்.

22. மாண்டனை பலவே, போர்மிகு குருசில்! நீ;
மாதிரம் விளக்கும் சால்பும், செம்மையும்,
முத்துடை மருப்பின் மழகளிறு பிளிற
மிக்கெழு கடுந்தார் துய்த்தலைச் சென்று
துப்புத்துவர் போகப், பெருங்கிளை உவப்ப
ஈத்துஆன்றுஆனா இடனுடை வளனும்,
துளங்குகுடி திருத்திய வலம்படு வென்றியும்,
எல்லாம் எண்ணின் இடுகழங்கு தபுத!
கொன்ஒன்று மருண்டெனென், அடுபோர்க் கொற்றவ!
நெடுமிடல் சாயக் கொடுமிடல் துமியப்
பெருமலையானையொடு புலம்கெட இறுத்துத்
தடந்தாள் நாரை படிந்து இரைகவரும்
முடந்தை நெல்லின் கழை அமல் கழனிப்
பிழையா விளையுள் நாடு அகப்படுத்து,
வையாமாலையர், வசையுநர்க் கறுத்த
பகைவர் தேஎத்து ஆயினும்
சினவாய்ஆகுதல் இறும்பூதால் பெரிதே!''.

குருசில்! நீ பல மாண்டனை; சால்பும் செம்மையும் வளனும் வென்றியும் எண்ணின் இடுகழங்கு தபுந! மருண்டெனென். கொற்றவ! சினவாயாகுதல் இறும்பூதால் பெரிது என மாற்றுக.

உரை : போர்மிகு குருசில் = போர்க்களத்தில் பெற்ற வெற்றியால் மேம்பட்ட குருசிலே! நீ பல மாண்டனை = நீ பல்லாற்றானும் மாண்புடையனாயினை. மாதிரம் விளக்கும் =

திசையெலாம் சென்று சிறக்கும். சால்பும் செம்மையும் = சான்ருண்மையும், நடுவுநிலை நல்லாட்சிச் சிறப்பும். முத்துடை மருப்பின் மழகளிறு பிளிற = முத்துப்படுமளவு முதிர்ந்த கோடுடையவாகிய இளங்களிறுகள் போர் வெறிப்பெற்றுப் பிளிறுமாறு. மிக்கு எழு கடுந்தார் = போர் வேட்கை மிகுந்து எழுகின்ற கடிய தூசிப்படையாளர். துய்த்தலைச் சென்று = பகைநாட்டின் எல்லைவரையும் சென்று. துப்புத் துவர்போக = தம் வலிமையெலாம் காட்டிப் போரிட்டு. பெருங்கிளை உவப்ப = பாணர் முதலாம் இரவலர் கூட்டத்தின் பெரிய சுற்றம் மனம் நிறை மகிழ்வெய்துமாறு. ஈத்து ஆன்று ஆனு இடனுடை வளனும் = நிறையக்கொடுத்து எஞ்சியதும் நிறைந்து, இடம் காணுதபடி, குவிந்து கிடக்கும், போரில் பெற்ற பொருள்களாம் பெருவளமும். துளங்கு குடி திருத்திய = தளர்ந்த குடியில் உள்ளாரின் தளர்ச்சி போக்கி வாழ்வித்த. வலம்படு வென்றியும் = விழுமிய வெற்றிச் சிறப்பும் ஆகிய. எல்லாம் எண்ணின் = எல்லாப் பெருமைகளையும் எண்ணிப் பார்க்கின், இடுகழங்கு தபுந = எண்ணுமுறைக்கண் இடும் கழங்கும் கணக்கில் அடங்காது பெருகுதற்குக் காரணமான பெரும்புகழ் பெற்ருேனே! அடுபோர்க் கொற்றவ = கொல்லும் போர்க்களத்தில், என்றும் கொற்றமே பெறும் பெரியோனே! கோள் ஒன்று மருண்டெனென் = உன் பண்புகளில் சிறந்து விளங்கும் ஒரு பண்பைக் கண்டு, மனம் மருண்டுபோயினேன். நெடுமிடல் சாய = நெடுமிடல் அஞ்சி என்பான் அழியவும், கொடுமிடல் துமிய = அவ்வஞ்சியின் கொடியவலி கெட்டொழியவும், பெருமலையானையொடு=பெரிய மலைபோலும் பரிய களிறுகளைக்கொண்ட நாற்படையோடு, புலம் கெட இறுத்து = அவ்வஞ்சியின் நாட்டகத்து நஞ்செய்கள் நலம் இழந்து போகும் வண்ணம் அந்நாட்டில் பாடிஅமைத்து இருந்து, தடந்தாள் நாரை படிந்து இரை கவரும் = பெரிய

நீண்டகால்களைக்கொண்ட நாரைக் கூட்டம், நீருள் படிந்து இரைதேடி உண்ணுதற்கு இடமான. முடந்தை நெல்லின் கழை அமல் கழனி = முற்றி வளைந்த கதிர்களை உடைய-வாகிய நெற்பயிரின், மூங்கில் போலும் தாள்கள் நிறைந்த கழனிகளைக் கொண்ட. பிழையா விளையுள் நாடு = தப்பாத விளைபயனை உடைய அவன் நாட்டை. அகப்படுத்து = கைக்கொண்டும். வையா மாலையர் = ஒரு பொருளாக வைத்து மதிக்கத்தகாதவரும். வசையுநர் = எக்காலத்தும் வசைமொழியே வழங்குவோருமாகிய. கறுத்த பகைவர் தேஎத்து ஆயினும் = உன்னோடு பகைகொண்ட பகைவர் நாட்டகத்தே போர் மேற்கொண்டு இருக்கின்றாயாகவும். சினவாய் ஆகுதல் = சிறிதும் சினவாதிருத்தல். பெரிது இறும்பூது = பெரிதும் வியத்தற்குரிய வியச்செயலாம்.

நீடுர் கிழவனை எவ்வி என்பானது ஏவல்கேளாது, அவனை எதிர்த்த பசும்பூண் பொருந்தலர் என்பாரை, நெடுமிடல் அஞ்சி, அரிமாணவாயில் உறத்தூரின்கண் வென்ற வரலாறு, பாணர் பாடிய அகநானூற்றுப் பாடலில் குறிப்பிடப்பட்டுளது.

''நீடூர் கிழவோன்
வாய்வாள் எவ்வி ஏவல் மேவார்
நெடுமிடல் சாய்த்த பசும்பூண் பொருந்தலர்
அரிமணவாயில் உறத்தூர்.''

—அகம்: 266

# 3. வரம்பில் வெள்ளம்

காப்பியாற்றுக் காப்பியனார், களங்காய்க்கண்ணி நார்முடிச்சேரலின் அரசவைக்கண் வீற்றிருந்தகாலை, சோணாட்டு அரியணையில் வீற்றிருந்தோனும், பாண்டிநாட்டு அரியணையில் வீற்றிருந்தோனும் ஆகிய இருபெருவேந்தரும் களங்காய்க் கண்ணியானின் புகழ்மிகு பெருவாழ்வு கண்டு பொறாராகி, அவனைப் போரிட்டழிக்கும் கருத்தினராய்த் தம் படைகளைப் பெருக்கி வருகின்றனர் என்ற செய்தியைச் சேரநாட்டு ஒற்றர் வந்து உரைத்தனர். அதுகேட்ட களங்காய்க்கண்ணி யான், "அன்னார் கருத்து அதுவாயின், அவர்படை போர் மேற்கொண்டு நம்நாடு புகும் முன்பே, நம்படை சென்று புகுக அவர் நாட்டுள்" என்று ஆணையிட்டான்.

அவ்வளவே, பனைபோல் பருத்த கால்களையுடைய களிறுகள், இருபுறமும் தொங்கும் மணிகள் விரைந்து பேரொலி எழுப்ப, பெருமித நடைபோட்டுப் புறப்பட்டு விட்டன. அவ்வாறு புறப்பட்ட அப்படை பகைவர் நாட்டில் அடிவைத்ததும், அந்நாட்டு நன்செய் புன்செய் நிலங்களுள் புகுந்து விளைபொருள்களைப் பாழ்பண்ணின. உண்ணுநீர் நிலைகளிலும், தண்ணீர்த்துறைகளிலும் புகுந்து, காலிட்டுக் கலக்கிச் சேறாக்கிச் சீரழித்தன. அம்மட்டோ! இவ்வாறு அழிவுத்தொழில் புரிந்தவாறே விரைந்துபோகும் அக்களிறுகளைப், பகையரசர்கள், தம் உயிரினும் சிறந்தனவாக, தம் பேரும் புகழும் புலப்படுத்தும் நினைவுச் சின்னங்களாகக் கொண்டு பேணிப்புரந்துவரும் காவல் மரங்களில் கட்டினார்கள் சேரநாட்டு வீரர்கள். காவல் மரங்களில் கட்டுண்ட யானைகள், அவற்றைச் சிறுகச் சிறுகச் சீரழிக்கத் தலைப்பட்டன, அது நிற்க.

களிற்றுப்படையை முன்னேபோக்கிய களங்காய்க் கண்ணியான், விற்பொறித்த கொடி பறக்கும் நெடிய தேர் மீது அமர்ந்து, "இப்படை தங்கற்காம் இடமும் இராதே", என்று கண்டவர் மருண்டு நிற்கத்தக்கதாய், "கரையற்றது கடல் என்று கூறுவர் என்றாலும், கடலுக்குக் கரை உண்டு; ஆனால் இப்படைக்கு ஒரெல்லை இராதுபோலு மாதலின், இஃது ஒரு வரம்பு கூறலாகா வெள்ளமாம்" என்று வியந்து கூறி வாய்பிளந்து நோக்கத்தக்க பெருமையுடையதான பெரும்படைக்குத் தலைமை தாங்கிப் புறப்பட்டு விட்டான். நார்முடிச் சேரலின் தலைமைக் கீழ்ப்புறப்பட்ட அந்நாற்படை, தாம் புகுந்த நாட்டு விளைபுலங்களிலும், வாழும் ஊர்களிலும் எரியூட்டியவாறே சென்று கொண்டிருந்தது.

சேரநாட்டின் பெரும்படை, கடல்போல் திரண்டு சென்று கொண்டிருப்பதைக்கண்டு, இப்படையை எதிர்த்து நிற்க-வல்ல ஆற்றல், சோழ பாண்டியர்க்குச் சிறிதும் இராதே. நார் முடிச்சேரலின் நாற்படைப் பெருமையறியாது, அவனைப் பகைத்துக் கொண்டு தங்கள் நாட்டழிவைத் தாமே தேடிக் கொண்ட அப்பேரரசர்களின் பேதைமையை என்னென்பது என்றுகூறிக் களங்காய்க்கண்ணியானைப் பாராட்டுவதும், பகைநாட்டு அழிவு நினைந்து நெஞ்சுருகுவதுமாக உடன் சென்றுகொண்டிருந்தார் புலவர் காப்பியாற்றுக் காப்பியனார்.

புலவரைப் பின்தொடர்ந்து சிலர் சென்று கொண்டிருந்-தனர். அவர்கள், அப்பகைநாட்டைச் சேர்ந்தவர்கள். பகையரசர்களின் படைநிலைகளை அரண்பெருமைகளை அவர்கள் அறிந்திருந்தார்கள் அதனால் "பெரியீர்! இதோ செல்லும் சேரர்படை, தாங்கள் கூறுவது போல், உண்மையில், அளந்துகாணமாட்டா ஒரு பெரும்படையேயாம் என்றாலும், இப்படையோ, போரிடப்போவது பகைவர் நாட்டில். பகைவர்

படை, எத்திசையில் வேண்டுமாயினும் வந்து தாக்கலாம் வெட்டவெளியில் இருக்கவேண்டிய, இடர்மிகுந்த பகைவர் நாட்டில். ஆனால் இப்படையெடுப்பை எதிர்நோக்கி நிற்கும் பகைவர்களோ, உயர்ந்த மதிலும், உட்புகலாகாக் காவற் காடும், கராமும் முதலையும் களித்து உலாவும் கிடங்கும், அம்புப்பொறி முதலாம் அரியபொறிப்படை அமைப்பும் கொண்ட அரணகத்தே வாழ்கின்றனர். இவர்க்கோ அத்தகைய அரண் எதுவும் இல்லை. இங்ஙனமாக, இவரால், அவரை வெற்றிகோடல் இயலுமோ! அவரை அழிப்பதற்குப் பதிலாக, அவரால் அழிவுண்டன்றோ மீள வேண்டியவராவர். இவர்தம் இறுதிநிலை அதுவாகப் போகவும், இவர்தம் தொடக்க நிலைச்செயல் கண்டு சிந்தை மகிழ்வது சிறந்தோர்க்கு அழகாகாதே'' என்று கூறினர்.

அது கேட்டார் புலவர். அவர் உள்ளம் துணுக்குற்றது. ''அவர் கூறுவனவும் உண்மையாமோ? அவர்கள் இந்நாட்டவர், ஆதலால், உள்ளநிலை உணர்ந்து கூறும் அவர் கூற்றில் உண்மை இருக்கவும் கூடும். அஃது அறியாது வந்து விட்ட நம்வேந்தன் வாழ்விழந்து போய்விடுவனோ!'' என்ற அச்சம் அலைக்கழிக்க, அறிவு மயங்கிவிட்டது புலவர்க்கு. தம்மை மறந்தநிலையில் தளர்நடையிட்டு வந்துகொண்டிருந்த புலவர், சென்று கொண்டிருந்த சேரநாட்டுப் படை, திடுமென ஓரிடத்தே பாடிகொளக்கண்டு கனவுநிலை கழித்து, கண்விழித்து நடப்பதை நோக்கினர்.

''பகைவர் படை வகுத்து நிற்கும் போர்க்களம் நோக்கிப் பாய்ந்து சென்று கொண்டிருந்த படை, திடுமென நின்று விட்டது ஏனோ? சற்று முன் யாம் அறிந்த செய்தியைப், படை இப்பொழுதுதான் அறிந்து கொண்டதோ? அதனால் அச்சம் மிகுந்து, அமர் குறித்து வந்த தன் கருத்தைக் கைவிட்டுப்

பின்வாங்க கருதுகின்றதோ? என்ற எண்ணங்கள் எழவே, களங்காய்க்கண்ணியானை அணுகினர். அந்நிலையில், நார்முடிச்சேரல், தன் நாற்படைத்தலைவரை அழைத்து, அவர்பால் ஏதேதோ ஆணைகள் போக்கினன். அவ்வாணையேற்றுவிரைந்தார்கள் படைத்தலைவர்கள். உடனே, பாடிகொண்டிருந்த படை, பற்பல அணிகளாகப், பல்வேறுதிசைகளில் பிரிவதும் கூடுவதுமாகிய நிகழ்ச்சிகள், விரைந்து நடை பெறலாயின. எல்லாம் சிறிது நாழிகையே. இறுதியில் ஒரு புதிய படைவகுப்புஉருப்பெற்று விட்டது. அந்நிலையில் அது ஓர் அரண்போலவே காட்சி அளித்தது எனக் கூறுவது பொருந்தாது. அரணாகவே மாறி விட்டது. வரிசை வரிசையாக நின்ற வாள்வீரர் அணிவகுப்பு அரண் மதிலாக, வான்நோக்கி உயர்ந்த வேல்ஏந்திய வீரர்கள், வாள்வீரரை வளைத்து நின்று, மதிலைச் சூழ வளர்த்துவிட்ட காவற்காடாக, விரைந்து பாயும் அம்பேவவல்ல வில்லாளர்போலும் வேறுபல படையாளர்கள், வாள்வீரர் வரிசைக்கும், வேல்வீரர் வரிசைக்கும் இடையே இடம்பெற்று, மதிலுக்கும், காவற்காட்டிற்கும் இடையேகிடந்து, வாள் போல் மின்னும் வாளைமுதலாம் மீன்கள்வழங்கும் அகழியாய் அமைய, அவ்வாறு அணிவகுத்து நின்ற அந்நாற்படையை ஊடறுத்து உட்புகுவது, கால் அற்ற காற்றுஒன்றிற்கு மட்டுந்தான் இயலுமேயல்லது, கால்கொண்டு உலாவும் உயிர்எதற்கும் இயலாத, அத்துணைச்சிறந்த அமைப்பினைக் கொண்ட அரணாக மாறிவிட்டது. பெரிய அரண்போலும் அமைப்புடையதாகி, விட்டது தம்நாற்படை அணிவகுப்பு, என்பதைக் கண்டு கொண்டதும், படைத்தலைவர் போர்முரசை முழக்கி விட்டார்கள்.

படைத்தலைவர் யாது கூறுகின்றனர்? அவர் ஆணை ஏற்ற படைவீரர் யாது புரிகின்றனர்? என்பதறியாது, திகைத்து

நின்ற நிலையில், கார்காலத்து இடியொலிபோல் எழுந்த முரசொலி கேட்டு, ஒருவாறு உணர்வு வரப்பெற்ற, புலவர் கண்களுக்குப் படையின் அணிவகுப்பு, காட்சி அளிக்கவே, இப்படையாளரைப் பீடழிக்கும் பெருவலி எப்படையாளர்க்கும் இராது என்ற எண்ணம் தலைதூக்கவே, தலைநிமிர்ந்து நோக்கினார்புலவர். அந்நிலையில், சோழ பாண்டிய நாடுகளின், அரண்பெருமைகளை வானளாவப் புகழ்ந்து பாராட்டிக் கொண்டு வந்த அப்பகைநாட்டான், சேரர் படையாளரின் சிறப்பினைக் கண்ணுற்றதும், அஞ்சி ஓடும் காட்சியைக் கண்டு களித்தார் காப்பியாற்றுக் காப்பியனார். அஞ்சி ஓடும் அவன் செயல், அவன் நாட்டு அரசர்செயலையே நினைவூட்டுவதாகும். இவனைப்போலவே, இப்படை வகுப்பைக் காண்பாராயின், இன்றுவரை எதிர்த்து நிற்கும் பகைவேந்தர்களும், அஞ்சிப் புறங்காட்டி ஓடிவிடுவர். ஓடிவிட்டனர் என்றே கோடல் வேண்டும், என்று துணிந்தார். அத்துணிவு வரப்பெற்றதும், சற்றுமுன் பகைநாட்டுப் புதியோன் கூற்றைக்கேட்டுக், களங்காய்க் கண்ணியான் போர்த்திறத்தில் குறைகண்டு, அவனைச்சிறிது தாழ்ந்தவனாக மதிப்பிட்ட புலவர், படையை அரணாக அமைந்துக்காட்டிய, அவன் பேராற்றல் அறிந்து, தம்மையும் திகைக்க வைத்த, அளந்து காணமாட்டா அவன் அறிவுத்திறம் அறிந்து வியந்தார். உடனே விரைந்தார் அவன்பால்; வானளாவப் புகழ்ந்துபாராட்டினார். அப்-பாராட்டே இப்பாட்டு.

படையைக் கடலுக்கு உவமை கூறுவதே பொதுமரபாக-வும், இப்படை, கடலினும் பெரிது என்பதை உணர்த்த விரும்பிய புலவர், ''அளந்து காணமாட்டா, எல்லை அற்றது இப்படை'' என்று கூறு முகத்தான், கடல் எல்லையுடையது; ஆகவே, இப்படைக்கடல், அவ்வுவர்க்கடலினும் பெரிது என்ற கருத்தைப் புலப்படுத்தினார். அக்கருத்தைப்

புலப்படுத்தும், பொருள்நயம் பொதிந்த **வரம்பில் வெள்ளம்** என்ற தொடரே, இப்பாட்டிற்கு அணிசெய்து நிற்பதால், இப்பாட்டிற்கு அத்தொடரையே பெயராக்கிப் பெருமை செய்துள்ளார்கள்.

**23.** ''இறும்பூதால் பெரிதே; கொடித்தேர் அண்ணல்!
வடிமணி அணைத்த பணைமருள் நோன்தாள்
கடிமரத்தான் களிறு அணைத்து,
நெடுநீர துறை கலங்க
மூழ்த்து இறுத்த **வியன்தானை**யொடு
புலங்கெட நெரிதரும் **வரம்பில் வெள்ளம்,**
வாள்மதிலாக, வேல்மிளை உயர்த்து,
வில்விசை உமிழ்ந்த வைம்முள் அம்பின்
செவ்வாய் எஃகம் வளைஇய அகழின்,
கார்இடி உருமின் உரறும் முரசின்
கால் வழங்கு ஆர்எயில் **கருதின்**
போர் எதிர் வேந்தர் ஒரூஉப நின்னே''

**துறை : வஞ்சித்துறை பாடாண்பாட்டு**
**வண்ணம்: ஒழுகு வண்ணம்**
**தூக்கு: செந்தூக்கும் வஞ்சித்தூக்கும்**
**பெயர்: வரம்பில் வெள்ளம்**

அண்ணல்! (1) களிறு அணைத்து (2-3), இறுத்த தானையொடு, நெரிதரும் வரம்பில் வெள்ளம் (4-6), மதிலாக, மிளைஉயர்த்து, அம்பினையும், அகழினையும், முரசினையும் உடைய எயில் **கருதின்**, வேந்தர் ஒரூஉப (7-12) இறும்பூது பெரிது.

கொடித்தேர் அண்ணல் = கொடி அணிந்த தேர்ப்படை மிக்க மன்னவனே. வடிமணி அணைத்த = தெளிந்த ஓசை

தரும் மணிகளைப் பக்கத்தில் கட்டப்பெற்ற. பணைமருள் நோன் தாள் = பணைபோன்ற, வலிய கால்களையுடைய. களிறு கடிமரத்தான் அணைத்து = களிறுகளைப் பகையரசர்களின் காவல்மரங்களில் பிணித்து. நெடுநீர துறை கலங்க = பகைவர் நாட்டில் உள்ள ஆழம் மிக்க நீர்நிலைகளெல்லாம் கலங்கிச் சேருகுமாறு. மூழ்த்த இறுத்த வியன் தானையொடு = திரண்டு வந்து தங்கிய பெரிய முன்னணிப் படையோடு கூடிய. புலங்கெட நெரிதரும் = தாம் சென்று தங்கும் பகைநாட்டு நிலங்கள் வளம் அற்றுப் போமாறு பரந்து சென்று தங்கும். வரம்பில் வெள்ளம் = கரையிலாக் கடல் போன்ற உன் பெரும்படை. வாள் மதிலாக = வாட்படையே மதிலாக. வேல்மிளை உயர்த்து = வேற்படையாகிய காவற் காட்டை வளர்த்து. விசைவில் உமிழ்ந்த அம்பு வைம்முள் = விரைந்து அம்பேவவல்ல விற்படை உமிழ்ந்த அம்புகளாகிய முள்வேலியினையும். செவ்வாய் எஃகம் வளைஇய அகழியின் = கூரியமுனைகளைக் கொண்ட பிறபடைகளாகிய, வளைந்த அகழியினையும். கார்இடி உருமின் உரறும் முரசின் = கார் காலத்து இடியோசைபோல் முழங்கும் முரசினையும் உடைய. கால் வழங்கு ஆர்எயில் கருதின் = காற்று ஒன்று மட்டுமே உட்புகலாம் அரிய காவல் அமைந்த அரணாக அணிவகுத்து நிற்பதைக் கருதிவிடுமாயின். போர் எதிர் வேந்தர் = போர் மேற்கொண்டு உன்மீது படைதொடுத்த பேரரசர்கள். நின் = உன்னையும், உன்படை அணியையும் கண்டு. ஒருப = அஞ்சி, உரம் அழிந்து ஓடி ஒளிந்துகொள்வர். இறும்பூது பெரிது = அக்காட்சி அளிக்கும் வியப்பு எமக்கு நனிமிகப் பெரிது.

# 4. ஒண்பொறிக் கழற்கால்

களங்காய்க்கண்ணி நார்முடிச்சேரல் பிறந்த சேரர்குடியோடு, வழிவழிப் பகைகொண்டிருந்த வேந்தர் பலராவர். அவர்தம் ஆண்மையும் ஆற்றலும் அளவிடற்கரியன. போர்க் களம் புகுந்தால், எதிர்ப்பவர் எவ்வளவுபேராயினும் எவ்வளவு பேராற்றல் வாய்ந்தவராயினும், அவர்கள் அனைவரையும் வென்று, வாகைசூடி வெளியேறுவதல்லது, அவர்க்குத் தோற்றுப் புறமுதுகுகாட்டி ஓடிவிடாப் பேராண்மை வாய்ந்தவர். இவ்வாறு போர்க்களம் பலகண்டு, பேரரசர் பலரை வெற்றிகொண்ட விழுப்புகழ் வாய்க்கப் பெற்ற அவர்கள், தாம்பெற்ற அவ்வெற்றிப் புகழ்களையெல்லாம், காலிற்புனையும் தம்வீரக்கழல்களில் விளங்கப் பொறித்துக் காட்டும் பெருநோக்கும் வாய்க்கப் பெற்றவராவர். இத்தகு போர்ச்சிறப்பு வாய்ந்த பெருமக்களாக வாழ்ந்தமையால், வேலைப்பாடமைந்த மிக உயர்ந்த நீண்ட ஆடைகளை, நிலம் புரள அணிந்து செம்மாந்து உலாவுவராயினர்.

சேரர்குலப் பகைவர்களின் செருக்குமிகு இவ்வாழ்வை உணர்ந்தவர், புலவர் காப்பியாற்றுக் காப்பியனார். ஆனால் அவர்தம் பெருவாழ்வு இப்போது அடங்கிக்கிடப்பதையும், பகைவர்களை வென்றல்லது மீளா வீறுடையவராகிய அவர்கள், சேரநாட்டு அரியணையில் களங்காய்க் கண்ணியான் அமர்ந்திருக்கக் கண்ணுற்றதும், அஞ்சி அடங்கி ஒடுங்கி உயிரோம்பிக், கிடப்பதையும் கண்ணுற்றார். பேராண்மையும் பேராற்றலும் வாய்ந்த பெருவீரர்களையும் அஞ்சப் பண்ணும் களங்காய்க்கண்ணியானின் திறம் கண்டு வியந்த புலவர் உள்ளம் அத்திறம் அவன்பால் வந்துபொருந்தியது யாங்ஙனம்? வெற்றிமிகு வேந்தரெல்லாம், இவன்பால் உள்ள

எப்பண்பு கண்டு அஞ்சி வெருவுகின்றனர்? என்ற வினாக்-களுக்கு விடைகாணத் துடித்தது.

அவ்வுண்மை உணரலாகும் வாய்ப்பு,புலவர்க்கு ஒருநாள் கிட்டிற்று. ஆற்றல்மிகு அரசரெல்லாம் அஞ்சி நடுங்கும் அவன்மீது, யாரோஒரு பகைவன் போர் தொடுத்து விட்டான். உடனே சேரநாட்டு நாற்படை, போர்க்களம் நோக்கிப் புறப்-பட்டுவிட்டது. வேந்தரெல்லாம் அஞ்சி நடுங்கவல்ல விறல்-மிகு வீரனாகிய தான், இச்சிறுபோர்க்கும் படைத்தலைமை தாங்கிப்போவது பொருந்துமோஎன எண்ணினானல்லன் களங் காய்க்கண்ணியான். சிறுபோரேயெனினும் உறுமுறையில் உடற்றுதல் வேண்டும் என்ற உண்மைஉணர்ந்து, படைத்தலைமையைப் பிறர்பால் ஒப்படைக்காது தானே ஏற்றுப் புறப்பட்டுவிட்டான். அரசவைக்கண் அமர்ந்து, நார்முடிச்சேரலின் நாளோலக்க நலங்கண்டு, உளம்மகிழ்ந்-திருக்கும் புலவரும், களங்காய்க்கண்ணியானோடு களம் நோக்கிப் புறப்பட்டார். அவனைக்கண்டு அவன் பகை வேந்தரெல்லாம் விதிர் விதிர்த்துப் போவதன் உண்மை, படைத்தலைமையைத் தானே ஏற்றுச் செல்லும், செயல் ஒன்றி-லேயே புலப்பட்டு விட்டது என்றாலும், போர்க்களத்தில், அதனினும் பெருவியப்பு பயக்கவல்ல பேருண்மை தமக்காகக் காத்துக் கிடந்ததைப், புலவர் அப்போது அறியாராயினர்.

போர் தொடங்கி விட்டது. போர் முறை பிறழாது போரிட்டுப் போரிட்டுப் பழகிய, படைமறவர் தலைமைக்கீழ்ப் பணிபுரியும் அரும்பெரும் வாய்ப்பு தமக்கு இருந்தமையால், முரசொலி முழங்க முன்னேறி வந்துகொண்டிருந்த பகைவர்-களின் நாற்படையைக் கண்ணுற்ற களங்காய்க்கண்ணியான், இந்நாற்படையை நிலைகுலையப் பண்ணவேண்டுமேல், போர்க்களத்தலைமையையும் தானே ஏற்றுக்கொள்ளுதல்

வேண்டும்; படைவகுப்பின் ஒவ்வொரு நிலையிலும் தானே முன்னின்று போரிடல் வேண்டும் என்பதை உணர்ந்தான், உணர்ந்த அக்கணமே, சிவந்த பிடரிதொங்க செம்மாந்து நிற்கும் தன்போர்ப்பரிமீது பாய்ந்து பகைவர்தம் குதிரைப் படையைத் தாக்கினன். சிறிது பொழுதிற்கெல்லாம் அப்-படைகெட்டது. அப்படைநிலைகுலையும் தருவாயில், அவர்தம் களிற்றுப்படை களம்புகுந்து கலாம் விளைக்கத் தொடங்கிற்று. அவ்வளவே, குதிரைமீது அமர்ந்திருந்த கோமகன், முகபடாம் அணி செய்ய, பொன்னரிமாலை மின்ன, காண்பவர் உள்ளமும் உடலும் ஒருங்கே கலங்கத்தக்க காட்சியுடைய-தாகித், தன்னைத்தொடர்ந்து வந்துகொண்டிருந்த தன்அரச யானைமீது அமர்ந்து கொண்டான். வந்த களிற்றுப்படை கணப்பொழுதில் பின்னிட்டுவிட்டது. வேழப்படையும் வீணுகக் கண்ட பகைவர், தேர்ப்படை கொண்டு, தாக்கத் தலைப்பட்டனர். கொடிபறக்கும் நெடிய தேர்கள் விடுவிடென வரக்கண்டதும், களங்காய்க்கண்ணியானும், விற்கொடி வானளாவப் பறக்கும் தன்போர்த் தேர்மீது அமர்ந்து அமர் புரிந்தான். அத்தேர்படைகளும் அழிந்தன. கரி பரி தேர் என்ற முப்படையும் முறிபடவே, பகைவீரர்கள் வாள் வேல் வில் என்ற தம்கைப்படைகளோடு களம்புகுந்து காற்றென உலாவிப் போரிடலாயினர். ஊர்தி இழந்து பகைவர் போரிடத், தான்மட்டும் தேர்மீது அமர்ந்து போரிடுவது, போர் அறமோ, போர்முறையோ ஆகாது என்பதை அறிந்திருந்த சேரர்குலக்குருசில், தானும் களம் இழிந்து கைப்படைகொண்டு கடும்போர் புரிந்தான். இவ்வாறு, நாற்படைக்கும் தானே தலைமை தாங்கி, நெறிதவருது நின்று போரிட்டமையால் பாய்ந்து வந்த பகைவர்தம் பெரும்படை, முற்றிலும் அழிவுற்றுப் போகவே, வாகை பூண்டு நிற்கும் வேந்தனின் வீறுகண்டு வியந்த புலவர், களவழிப்பா ஒன்றுபாடி, அவனைப் போற்றிப் புகழ்ந்தார்.

காப்பியாற்றுக் காப்பியனார் பாடிய, அக்களவழிப்பாவில், **ஒண்பெறிக் கழற்கால்** என்ற தொடர், களங்காய்க்கண்ணி நார்முடிச் சேரலால் அழிவுண்ட நாற்படையில் பணிபுரிவார் ஒவ்வொருவரும், களம்பல புகுந்து ஆங்குப்பெற்ற வெற்றிப் புகழ் அனைத்தையும் விளங்க உணர்த்தும், உரைபொதிந்த வீரக்கழல் கட்டிய காலினராவர் என்று உணர்த்தி, அவன் பகைவரின் பேராண்மையையே பாராட்டுவதன்மூலம், அவன் புகழ்பாராட்டும் பாநலம் அமைத்துள்ளமை கண்டு வியந்த வாலறிவுடையார் அப்பாட்டிற்கு அத்தொடரையே பெயராகச் சூட்டிப் பெருமை செய்தார்கள்.

**24.** “ஒரூஉப நின்னை; ஒருபெரு வேந்தே!
ஓடாப் பூட்கை, **ஒண்பொறிக் கழற்கால்,**
இருநிலம் தேயுல் விரிநூல் அறுவையர்;
செவ்வுளைய மாவூர்ந்தும்,
நெடுங்கொடிய தேர் மிசையும்,
ஓடை விளங்கும் உருகெழு புகழ்நுதல்
பொன் அணியானை முரண்சேர் எருத்தினும்
மன்னிலத்து அமைந்த..........
மாறா மைந்தர் மாறுநிலை தேய,
முரசுடைப் பெருஞ்சமம் ததைய, ஆர்ப்பெழ
அரைசுபடக் கடக்கும் ஆற்றல்
புரைசால் மைந்த! நீ ஓம்பன் மாறே”.

**துறை: தும்பை அரவம்**
**வண்ணம்: ஒழுகுவண்ணம்**
**தூக்கு: செந்தூக்கும், வஞ்சித்தூக்கும்**
**பெயர்: ஒண்பொறிக் கழற்கால்**

வேந்தே! (1) மைந்த! (12) மைந்தர் மாறுநிலை தேய (9) மாவூர்ந்தும் தேர்மிசையும், எருத்தினும், நிலத்தும் (4-8)

இருந்து நீ ஓம்பல்மாறு, (12) அறுவையர் (2-3) நின்னை ஒரு உப (1)என வினைமுடிவு செய்க.

உரை : ஒருபெருவேந்தே = ஒப்பற்ற பெரிய வேந்தனே; அரைசுபடக் கடக்கும் ஆற்றல் = பகையரசர் அனைவரும் அறவே அழிந்துபோகுமாறு அவர்களைவெற்றி கொள்ளும் ஆற்றல் வாய்ந்த. புரைசால் மைந்த = உயர்ந்த பண்புகளின் நிலைகளமான ஆற்றல் மறவனே! மாறு மைந்தர் மாறுநிலைதேய = போர் முறையில் வழுவாத வீரர்களின் மாறுபாட்டிற்குக் காரணமாம், மிகுவலி கெடுதற் பொருட்டு. செவ்வுளைய மாவூர்ந்தும் = சிவந்த தலையாட்டம் பெற்ற குதிரைமீது அமர்ந்தும். நெடுங்கொடிய தேர்மிசையும் = நெடிய கொடிபறக்கும் தேர்மீது இருந்தும். ஓடை விளங்கும் = முகபடாம் கிடந்து அழகு செய்யும். உருகெழு புகர்நுதல் = கண்டார்க்கு அச்சம் ஊட்டும் புள்ளிகள் பொருந்திய நெற்றியினை உடைய. பொன்னணி யானையின் = பொன்னரி மாலை அணிந்த யானையுடைய. முரண்சேர் எருத்தினும் = வலிமை பொருந்திய கழுத்தின்கண் அமர்ந்தும், மன்நிலத்து = நிலைபெற்ற நிலத்தில் நின்றும். முரைசுடைப் பெருஞ்சமம் = போர்முரசு முழங்கும் பெரிய போர்க்களத்தில். ததைய = பகைவர் படையோடு நெருங்கி நின்று போரிடும் நிலையில். ஆர்ப்பெழ = ஆரவாரப் பேரொலி எழ. நீ ஓம்பல்மாறு = போர்செய்து நின் நாற்படையைக் காத்து நிற்பதால். ஓடாப் பூட்கை = போரில் புறங்காட்டாப் பண்பும். ஒண்பொறிக்கழற்கால் = போர்ப்புகழ் பொறிக்கப் பெற்ற ஒள்ளிய பொன்னாலான கழல்கட்டிய கால்களும். இருநிலம் தோயும் விரிநூல் அறுவையர் = பெரிய நிலம்வரை நீண்டு தொங்கும் மெல்லிநூலால் ஆன ஆடையும் உடையவராகிய நின் பகைவரெலாம். நின்னை ஒருஉப = நின்னைக் கண்டு நடுங்குவர்.

ஆடையை நிலந்தோய உடுப்பது பண்டையோர் மரபு; ஆகவே ''இருநிலம் தோயும் விரிநூல் அறுவையர்'' என்றார். இது மரபு என்பதை ''நிலம் தோய்வு உடுத்த நெடு நுண் ஆடையர்'' என்ற பெருங்கதை வரியும் (1: 35) உறுதி செய்தல் காண்க.

# 5. மெய்யாடு பறந்தலை

களங்காய்க்கண்ணிநார்முடிச்சேரலின் நாளோலக்க மன்றின், இடையேஇருந்து மாலையில் செவ்வழிப்பண்ணும், காலையில் மருதப்பண்ணும் இசைத்து, அவன் விழுநிதிப் பெருக்கையும், அவன் வெற்றிப்புகழையும் பாடிப்பரவும் பாணர் கூட்டத்தையும், பொருநர் கூட்டத்தையும் கண்டு, களங்காய்க்கண்ணியான் இத்துணைப் பெருமைக்கு உரியனாதல் எவ்வாறோ என எண்ணிஎண்ணி மருண்ட புலவர்க்கு, அவன் வெற்றிகொண்ட களக்காட்சியைக், கண்ணுற்றபின்னரே தெளிவு பிறந்தது.

களங்காய்க்கண்ணியானோடு களம்புகுந்த புலவர் காப்பி-யாற்றுக் காப்பியனார், போர்முடிவில் களக்காட்சிபால் தம் கண்ணோட்டத்தைப் போக்கினார். போர் முடிந்த நேரம் பகலோன் மேலைமலைக்கிடையே புகுந்து மறையும் மாலை நேரம். அந்திவானம், செங்குருதியை வாரி இறைத்தாற் போல் சிவந்திருந்தது. அந்திவானத்து அழகைக்கண்டு களித்த கண்களால் களத்தை நோக்கினார். கரி பரி காலாட்களின் குருதிக்கறை படிந்துபடிந்து, களமும் அவ்வந்திவானம் போல் சிவந்து தோன்றினமையால், அவ்வானத்தோடு ஒருபுடை ஒற்றுமை கொண்டிருந்தாயினும், அந்திவானம் காண்பவர் உள்ளத்தில் கழிபெரும் களிப்பினை ஊட்டுவதாக, களம், மாறுகக் கரைகாணுக் கலக்கத்தையும் நடுக்கத்தையுமே ஊட்டுவதாயிருந்தது.

களங்காய்க்கண்ணியான் ஆற்றிய போரின் கடுமையால் அழிந்துபோன பகைவர்படையினைச் சேர்ந்த களிறுகளின்

வெண்கோடுகளும், தேர்களின் திகிரிகளும் களம்எங்கும் சிதறிக் காட்சிஅளித்தன. பிணம் தின்னும் பருந்துக் கூட்டம், தம்பெடைகளோடு வந்து களத்தை மொய்த்துக் கொண்டு, ஆங்கு மடிந்து வீழ்ந்து கிடக்கும் மாவீரர் உடல்-களையும், கரியும் பரியும் போலும் மாவினத்தின் உடல்-களையும் கொத்தித்தின்று கொக்கரிக்கலாயின. தலைவேறு மெய்வேருக வெட்டுண்டு வீழ்ந்துகிடப்பவர் அனைவருமே, மறவர் மரபில் வந்தவராதலின், தலைஇழந்து போன நிலை-யிலும், அம்மாவீரம்,அவர் மெய்யில் குடிகொண்டு நிற்பதால், அக்குறையுடல்கள் குதித்துக்குதித்துக் கூத்தாடிக்கொண்-டிருந்தன. இக்கொடுங்காட்சிகள் ஆங்காங்கே நிகழ்ந்து கொண்டிருக்கும் அந்நிலையில், குருதிக்கறை படிந்த அக்-களத்தையே, ஆடரங்கமாகக் கொண்டு பேய்க்கூட்டம், பெரு நடம்புரியத் தொடங்கிவிட்டது.

களத்தின் இக்கொடுங்காட்சிகளைக் கண்ணுற்ற புலவர் காப்பியாற்றுக் காப்பியனுரின், உள்ளமும் உடலும் ஒருசேர நடுங்கின என்ருலும், தன்னைப் பகைப்பவர் படையினை இத் துணைப் பாழ்படுத்தும் நார்முடிச்சேரலின் போர்த் திறத்தினு லும், அப்போர்த்திறங்களையெல்லாம் அறிந்து அழியாமல் காக்கும் அவன் அறிவுத் திறத்தாலுமே, புலவர்களின் அத் துணைப்பாராட்டிற்கும், அவன் உரியனுகிருன் என்ற உண்மை யினை உணர நேர்ந்தமையால், உள்ளம் மகிழ்ந்து, அவன் திறம் நினைந்து அவனை நெடிது பாராட்டினுர்.

புலவரின் பாராட்டுப் பாவில், இடம், பெறும் **மெய் யாடு பறந்தலை** என்ற தொடர், நார்முடிச்சேரலால் உயிரிழந்த பகைவர், உயிரிழந்துபோயினும் உடல்ஆடும் உரம் வாய்க்கப்பெற்ற பெருவீரராவர்; அத்துணைப் பெரு வீரர்களையும் அழித்து ஒழிக்கவல்ல ஆற்றல் மறவன் அவன்

என, நார்முடிச்சேரலின் போர்ப்புகழ் பாடும் பெருமை-யுடையதாதல் கண்டு, அப்பாட்டிற்கு அதுவே பெயராக, அமைத்துச்சென்ற ஆன்றோர்தம் அறிவுநலம் கண்டு பாராட்டுவோமாக.

25 ''புரைசால் மைந்த! நீ ஒப்பன்மாறே,
உரை சான்றனவால் பெருமை, நின் வென்றி,
இருங்களிற்று யானை இலங்குவான் மருப்பொடு,
நெடுந்தேர்த் திகிரி தாய வியன்களத்து
அளகுடைச் சேவல்கிளை புகாஆரத்,
தலைதுமிந்து எஞ்சிய **மெய் ஆடு பறந்தலை**
அந்திமாலை விசும்பு கண்டன்ன
செஞ்சுடர் கொண்ட குருதி மன்றத்துப்
பேஎய் ஆடும், வெல்போர்
வீயாயாணர் நின் வயினானே''.

**துறை : வாகைத் துறைப் பாடாண்பாட்டு**
**வண்ணம் : ஒழுகு வண்ணம்**
**தூக்கு: செந்தூக்கு**
**பெயர்: மெய்யாடு பறந்தலை**

மைந்த! நீ ஓம்பன்மாறு, வெல்போர் வீயாயாணர் நின் வயின், பெருமை வென்றி உரைசான்றன, என வினை முடிவு கொள்க.

உரை: புரைசால் மைந்த = உயர்ச்சி பலவும் ஒருங்கே அமைந்த உரமுடையோய்! நீ ஓம்பன்மாறு = படை அழிவு நேராவாறு நின்நாற்படையைக் காத்து நிற்பதால். இருங்களிற்று யானை = பெரிய ஆண்யானைகளின். இலங்குவான் மருப்பொடு = ஒளிவீசும் வெண்ணிறத் தந்தங்களோடு.

நெடுந்தேர்த் திகிரி = நெடியதேர்களின் திகிரிகளும். தாய் வியன் களத்து = சிதறிக் கிடக்கும் பெரிய போர்க்களத்தில். அளகுடைச் சேவற்கிளை = பெடைகளோடு கூடிய பருந்துக் கூட்டம். புகாஆர = தசையாகிய இரையை உண்ண. தலை துமிந்து எஞ்சிய மெய்ஆடு பறந்தலை = தலை துணிவுண்டு போக, எஞ்சிய மெய்யாகிய முண்டம். எழுந்து ஆடும் அப்-போர்க்களத்தின் கண். அந்தி மாலை விசும்பு கண்டன்ன = அந்திப் போதின் செவ்வானத்தை கண்டது போன்ற. செஞ் சுடர் கொண்ட குருதி மன்றத்து = செவ்வொளி வீசும் குருதிக்கறை படிந்த மன்றங்களில். பேய் ஆடும் = பேய்கள் கூத்தாடும். வெல்போர் = வெல்லும் போராகிய. வீயா யாணர் = அழியாத புதுமையினையுடைய. நின்வாயின் = நின்னிடத்தில், நின்பெருமை வென்றி = நின்பெரு வளமும் வீரப்புகழும். உரை சான்றன = ஆன்றோர்கள் புகழ்ந்து பாடுமளவு, பெருகி நிறைவவாயின.

தலை வெட்டுண்டு போக, இருந்தஉடல் எழுந்து ஆடுவதை, அட்டை ஆடல் எனும்துறை என்ப. ''கணையும் வேலும் துணையுற மொய்த்தலின், சென்றஉயிரின் நின்ற யாக்கை இருநிலம் தீண்டா இருநிலை'' எனப் பாராட்டுவர் தொல்காப்பியனார். [புறத்திணை: 16].

# 6. வாள்மயங்கு கடுந்தார்

களங்காய்க்கண்ணி நார்முடிச்சேரல், நாள்தோறும், நாளோலக்கப் பேரவைக்கண் வீற்றிருந்து, தன்னைப் பாடிப் பரவும், பாணர் பொருநர் கூத்தர் போலும் இரவலர்க்கும், புலவர் பெருமக்கட்கும், பொன்னையும் பொருளையும், வாரிவாரி வழங்கும் வழக்குடையனுவன். வரையறை செய்யாது, அவன் அவ்வாறு வழங்கவும், அவன் பெருங்கோயிலில் அடை-பட்டிருக்கும் மாநிதிப் பெருக்கம், ஒருசிறிதும் குறைவுறுது, மேலும் மேலும் பெருகும்வகையில், புதுப்புது வருவாய்கள் நாள்தோறும் வந்து கொண்டேயிருந்தன. இவ்வாறு அவன் வாரிவாரி வழங்குவதால் வற்றிப்போவதற்கு மாருக, வரை-யறையின்றிப் பெருகும் அவன் பொருட்செல்வப் பெருக்கைக் கண்டு, புலவர் காப்பியாற்றுக் காப்பியனுர், ஒருபால் பெரு-மகிழ்ச்சி கொண்டார் என்ருலும், அந்நிகழ்ச்சி அவர்க்கு மற்ருெருபால் பெருயவிப்பையே அளிப்பதாயிற்று. கொடுக்கக் கொடுக்கக் குறைபடாதிருப்பதே வியப்பு! நார்முடிச்சேரலின் நிதியோ, அந்த அளவோடு நில்லாது, மேலும்மேலும் பெருகுகிறதே! இவ்வரிய நிகழ்ச்சி எவ்வாறு நிகழ்கிறதோ? ஏனையோர்பால் உள்ள பொருள் வளத்திற்-கில்லா இப்புதுமை, இவன் பொருட் செல்வத்திற்கு மட்டும் வந்து பொருந்தியது எவ்வாருே? என்று எண்ணி எண்ணி வியந்த புலவர், வியப்பின் மேலீட்டால், கோயிற்பண்டாரத்-தைக் காத்துநிற்கும் பணி மேற்கொண்டிருப் பாரையே, அதற்காம் காரணம் யாது? எனக் கேட்டுவிட்டார்.

பண்டாரப் பொறுப்பாளர், ‘‘புலவரேறே! நார்முடிச்-சேரலாதன், நாளோலக்க அவைக்கண் இருந்து, பொருள்

வழங்க மட்டும் கற்றிருந்தால், இந்நேரம் இப்பெருங்கோயில், வெறுங்கோயிலாக மாறிவிட்டிருக்கும். ஆனல், பொருளை வழங்கும் முறையைக்காட்டிலும், அப்பொருளைப் பெறும் வழியைப், பெருகத் தெரிந்துள்ளான். மாநிதிப் பெருக்கம் மண்டிக்கிடக்கும் மாற்ருர்களைப், பணிகொள்வதிஞலேயே தான் பொருள்மிகு பெருவாழ்வில் வாழலாம், வருவார் அனைவர்க்கும் வழங்கலாம்; ஆகவே, மாற்ருரைப் பணி-கொள்ளும் அப்பணியை, அடுத்தடுத்து மேற்கொள்ள வேண்டும்; அதற்கேற்ற பெருவலியுடையவனுகத், தன்னையும், தன் படையையும் ஆக்கிக்கொள்ளுதல் வேண்டும் என்ற, உண்மையை உணர்ந்து, அம்முறையை விடாது மேற்-கொண்டுள்ளான்; ஆகவே, அவன்பால் அப்பெருவலி பொருந்தி யிருக்கும்வரை, இப்பெருவாழ்விற்கு அழிவில்லை; இதுதான் உண்மை''. எனறு கூறக்கேட்ட புலவர்க்குப், புதிய கவலை ஒன்று புகுந்து கொண்டது.

களங்காய்க்கண்ணியானின் செல்வவாழ்வு, அவன்பால் பொருந்தியிருக்கும் பெருவலியையே அடிப்படையாகக் கொண்டுளது ஆதலின், அப்பெருவலி குறைந்தால், அது குறைந்து போகும்; ஆனல், ஒருவர் பெற்றிருக்கும் உடல் உரம், அழியா நிலையுடையதல்லவே; ஆண்டு ஏறஏற, அது குறைந்து போகுமே; களங்காய்க்கண்ணியானின் வாழ்நாளில் பெரும்பகுதி இப்போதே கழிந்து விட்டதே; இந்நிலையில் அவன் ஆற்றல், எத்துணை நாட்களுக்கு அழியாதிருக்கும்; விரைவில் அழியத் தொடங்கிவிடுமே அது; அது அழிந்து விட்டால், இவ்விழுநிதி இல்லாகி விடுமே; எமக்குப் பொருள் வழங்கும் அவ்வள்ளியோன் வாழ்வில் வளம்குறைந்து போயின், எம்வாழ்வும் இருண்டுவிடுமே; அந்தோ! அந்நிலை வந்துவிடுமோ! என்ற எண்ணங்கள் எழவே, புலவர் உள்ளம் பெரிதும் நடுங்கி விட்டது; அந்நடுக்கத்தைக் கண்ட அப்-

பண்டாரப் பொறுப்பாளர், "புலவரே! தாங்கள் நினைந்து நடுங்கும் அந்நிலை, எம் கோமகற்கு நேர்ந்துவிடாது; அவன் பேராற்றல், அத்துணை விரைவில் அழிந்து போகும் இழிவுடைய தன்று; இஃது உண்மை; இதைத், தாங்கள் உணரவேண்டு-மாயின், இப்பருவத்திலும் அவன்மேற்கொள்ளும் போர்க் களத்தைச் சென்றுபாருங்கள்; இப்போதும் அவன் போர்க் களத்தில்தான் உள்ளான்; அக்களமும் அண்மையில்தான் உளது; இப்போது புறப்பட்டால், போர் ஓயும் தருவாயில் ஆங்கு அடைந்து விடலாம்; வேண்டுமாயின் சென்று, அவன் ஆண்மைச் சிறப்பை, ஆற்றற் பெருமை நேரில் கண்டு, உம்கலக்கத்தைக் கைவிடுவீவராக" என்று கூறினர்.

பொறுப்பாளர் கூறியனகேட்ட புலவர், உடனே போர்க்-களம் நோக்கிப் புறப்பட்டு விட்டார்; களக்காட்சியைப் போர் முடிவில் காண்பதினும், அப்போர் நிகழ்ந்து கொண்டிருக்கும் போது காண்பதே பொருந்தும், என்ற உணர்வு பிறக்கவே, புலவர் விரைந்து நடந்தார்; அதனல் போர்முடியச் சிறிது நாழிகை இருக்கும் போதே, களத்தை அடைந்துவிட்டார்; களம்புகுந்த புலவர் கண்கள், களங்காய்க்கண்ணியான் யாண்டுளன் என நோக்கின. அவன், தன்படையின் முன்-வரிசையில் நின்று, மாற்றார் படையின் முன்வரிசையில் நிற்கும் வாள்வீரர்களோடு, வாட்போர் புரிந்து கொண்-டிருந்தான். களங்காய்க்கண்ணியானின் கைவாள் எது? அவனைச் சூழ்ந்து நின்று போருடற்றும் மாற்றார் ஏந்தும் வாள்கள் எவை? என்பதை எளிதில் கண்டுகொள்ளாதபடி, அவ்வாள்கள் ஒன்றேடொன்று கலக்கக் கடும்போர் நிகழ்ந்து கொண்டிருந்தது; வாள்வீசும் அவன் தோளாற்றலைக் கண்ணுற்ற புலவர், தாம் அரண்மனைக்கண் கொண்ட ஐயமும் அச்சமும் அற்று, அவன் ஆற்றலை நினைந்து வியந்து கொண்டிருந்தார்; அவ்வியப்புணர்வால் புலவர் தன்னை

மறந்து விட்டார். போர்முடிய வீடுதிரும்பும் காவலன், ஆங்கு நிற்கும் அப்பாவலனைக் கண்டு, அவரை அணுகி ஆர்வமோடு ஆரத்தழுவிக் கொள்ளவே, தம் நினைவிற்கு வந்த புலவர், வென்றவாளோடு தம்முன் நிற்கும் வேந்தனையும், கொடும்போர்ஓயக் காட்சி அளிக்கும் களத்தையும் கண்ணுற்றார். களக்காட்சி கண்களைக் கூசப்பண்ணும் கொடுமையுடையதாய் இருந்தது.

வாள்வீரர் வெட்டி வீழ்த்திய யானைக்கைகள், பனந்தோப்பில் வெட்டுண்டு வீழ்ந்து கிடக்கும் பனைமரங்களை நினைவூட்டுவவாயின. உயிரிழந்து வீழ்ந்த வீரர் உடல்களும், கரிபரிகளின் பருவுடல்களும் மலைமலையாகக் குவிந்து கிடந்தன; அவற்றை உண்ணும் ஆர்வம் பெருக, ஆங்கு வந்து குவிந்த பருந்துக் கூட்டமும், கழுகுக் கூட்டமும் அப்பிணங்கள்மீது அமர்ந்து உண்ணத் தொடங்கின; அந்நிலையில், மலைமீதிருந்து விரைந்து வந்து புரண்டு விழும் பெரிய நீர்வீழ்ச்சிபோல், அப்பிணமலைகளிலிருந்து வெளிபட்டுப் புறப்பட்ட செங்குருதி வெள்ளம், பொறித்து வைத்தன போன்ற புள்ளிகள் நிறைந்த கழுத்தினையுடைய பருந்துகளையும், குடுமி கொண்ட கழுகுகளையும் ஈர்த்துக்கொண்டு, அப்பிணமலையின் ஒரு பகுதியைக், கீழ் மேலாகப் புரட்டிக்கொண்டு கூளிக்கூட்டம், தன் இருகரையிலும் கூடியிருந்து, பிணங்களைப் பற்றித் தின்றும் குருதி குடித்தும், குதித்துக்குதித்துக் கூத்தாடப், பெருக்கெடுத்து ஓடிக் கொண்டிருந்தது.

அக் காட்சியைக் கண்டு, புலவர், ஒருபால் அஞ்சி நடுங்கினார் என்றாலும், இத்துணைக் கொடியபோரை, இத்துணை முதிய பருவத்திலும் செய்துகாட்டும் களங்காய்க்கண்ணியானின் திறம்உணர வாய்ப்பளித்த அக்களக்காட்சியை தாம் பண்டு கொண்ட ஐயத்தை அகற்றி விடவே, அக்காட்சியை

வாழ்த்தினார்; களத்தை வாழ்த்திய அவர் வாய், அண்மையில் நிற்கும் காவலனை வாழ்த்திற்று; அக்காவலன், அக்கொடும் போர் புரிந்து பெருவெற்றிபெறத் துணைபுரியும், அவன் மறத்தை வாழ்த்திற்று. வாழ்த்தெல்லாம் ஒரு பாட்டாக வடிவெடுத்தன.

காப்பியாற்றுக் காப்பியனார் போலும் புலவர்களை, வாழ்விப்பது களங்காய்க்கண்ணியானின் பெருவளம்; அப்பெருவளத்தை அளிப்பது அவன் பெருவலி; அப்பெருவலிக்கு உறுதுணைபுரிவது அவன் கைவாள்; ஆகவே, அவ்வாட்போர் நிகழும் போர் முனையிலேயே புலவர்களின் பெருவாழ்வு நிற்பதாயிற்று: ஆகவே, அம்முனையிடத்தைப் பாராட்டும் **"வாள்மயங்கு கடுந்தார்"** என்ற தொடரையே, அவ்வாழ்த்துப் பாவிற்குப் பெயராக வைத்து வழங்கினார் புலவர்.

**26.** வீயா யாணர் நின் வயினானே
தாவாதாகும் மலிபெறு வயவே;
மல்லல் உள்ளமொடு, வம்பு அமர்க் கடந்து
செருமிகு முன்பின் மறவரொடு தலைச்சென்று,
பனைதடி புனத்தின் கைதடிபு பலவுடன்
யானைபட்ட **வாள்மயங்கு கடுந்தார்,**
மாவும் மாக்களும் படுபிணம் உணீஇயர்
பொறித்த போலும் புள்ளி எருத்தின்
புன்புற எருவைப் பெடைபுணர் சேவல்
குடுமி எழாலொடு கொண்டு, கிழக்கு இழிய
நிலம்இழி நிவப்பின் நீண்நிரை பலசுமந்து
உருவெழு கூளியர், உண்டு மகிழ்ந்து ஆடக்
குருதிச் செம்புனல் ஒழுகச்
செருப்பல செய்குவை; வாழ்க நின் வளனே!

துறை: களவழி
வண்ணம்: ஒழுகு வண்ணம்
தூக்கு: செந்தூக்கு
பெயர்: வாள்மயங்கு கடுந்தார்

உள்ளமொடு அமர்கடந்து, மறவரொடு சென்று, யானை பட்ட கடுந்தாரில், பிணம் உணீஇயர் வந்த சேவலை எழா-லொடு கொண்டு, நிவப்பின், நிரை சுமந்து, கூளியர்ஆட, குருதிப்புனல் ஒழுக, செருப்பல செய்குவை; நின்வயின் வயவு, தாவாதாகும்; நின்வளன் வாழ்க எனக்கொண்டு கூட்டுக.

உரை:- மல்லல் உள்ளமொடு = வெற்றியால் விளையும் மகிழ்ச்சி நிறைந்த மனம் உடைமையால். வம்பு அமர் கடந்து = பகைவர் செய்யும் புதுப்புது போர் முறைகளையெல்-லாம் வென்று. செருமிகு முன்பின் = போரில் சிறந்த மறத்-தினை உடையராகிய, மறவரொடு தலைச்சென்று = வீரர்-களோடு போர்க்களம் புகுந்து, பனைதடிபுனத்தின் = பனைமரங்களை வெட்டி வீழ்த்திய தோட்டத்தைப் போல. கைதடிபு யானை பலவுடன் பட்ட = கைகள் வெட்டுண்டு யானைகள் கூட்டமாய் இறந்து கிடக்கும். வாள் மயங்கு கடுந்தார் = இருதிறத்து வீரர்களும் கலந்து நின்று போருடற்றும் தூசிப் படை நிற்கும் களத்தின்கண். மாவும் மாக்களும் படுபிணம் = குதிரைகளும் யானைகளும் வீரர்களும் இறப்பதால் குவிந்து கிடக்கும் பிணங்களை. உணீஇயர் = உண்ணும் பொருட்டு வந்திருக்கும். பொறித்த போலும் புள்ளி எருத்தின் = பொறித்து வைத்தனபோலும் புள்ளிகளைக் கொண்ட கழுத்தினையும். புன்புறம் = புல்லிய புறத்தினையும் உடைய. பெடைபுணர் எருவைச் சேவல் = பெடையோடு கூடிவாழும் சேவற் பருந்துகளை. குடுமி எழாலொடு = கொண்டையுடைய-வாகிய கழுகுகளோடு, கொண்டு = அடித்துக் கொண்டு,

கிழக்கு இழிய நிலம்இழி நிவப்பின் = பள்ளம் நோக்கிப் பாய்வான் வேண்டி, மேட்டு நிலத்திலிருந்து புரண்டு விழும் நீர்வீழ்ச்சிபோல். நீள்நிரை பல சுமந்து = பிணங்களாகிய பெரிய பெரிய பாரங்களைச் சுமந்துகொண்டு. உருகெழு கூளியர் = அஞ்சத்தக்க உருவம் உடையவாகிய கூளிக் கூட்டம், உண்டு மகிழ்ந்து ஆட = பிணம் உண்டு களித்துக் கூத்தாடுமாறு. குருதிச் செம்புனல் ஒழுக = குருதியாகிய செந்நீர் வெள்ளம் பெருக்கெடுத்து ஓட. செரு பல செய்குவை = போர்கள் பலப்பல புரிகுவை. ஆதலின், வீயாயாணர் நின்வயின் = அழியாத புதுப்புது வளங்களை உடைய உன்பால். மலிபெறுவயவு = நிறைந்து தோன்றும் பெருவலி. தாவாதா-கும் = அழியாது நின்று நிலைபெறும், நின்வளன் வாழ்க = அத்தகையோனாகிய நின்பால் உள்ள வளனும் வழிவழிப் பெருகி வாழ்வதாக !

களங்காய்க்கண்ணியானின் பகைவர், காலவளர்ச்சிக்கு ஏற்ப களப்போரில், புதுமைகளைப் புகுத்திப் போரிடும் போர் நுணுக்கம் வாய்ந்தவர். அத்தகைய பகைவர்களையும் வெற்றி கொண்டவன் எனக், கூறுமுகத்தான் களங்காய்க் கண்ணியானும் புதுமுறை புகுத்திப் போரிட வல்லவன் என்பதை அறிவுறுத்தி விட்டார் புலவர், ''முன்பு செய்து வருகின்ற போராற்றிப் பகைவர் புதிதாகப் பகைத்துச் செய்யும் போர்'' என்று கூறியுள்ளார் பழைய உரைகாரர்.

# 7. வலம்படு வென்றி

களங்காய்க்கண்ணிநார்முடிச்சேரலாதன், நாடு காவல் முறையை நன்கு அறிந்திருந்தான்; அறிந்த அந்நெறி நின்று நல்லரசு ஓச்சிய அவன், அப்பெருமையால் மகிழ்ந்து, தன்னை வியந்து, அதனால் தன்னைமறந்து தருக்குமிகுந்து தலைதடு மாறாது, பண்பால் நிறைந்த பெரியோனாகவும் வாழ்ந்து வந்தான். உயர்ந்த பண்பும், சிறந்த பெருமையும் உடைய உரவோரையல்லது பிறரைப் புகழ்ந்துரைத்து அறியாப் பெருமைமிகு நாவுடைய நல்லோர்கள், தன்னை நாள்தோறும் புகழ்ந்து பாடவேண்டும் என்ற வேட்கையுடையவன் அவ்வேந்தன். அதனால், அவர்கள், தன்னைமதித்து மனநிறைவோடு வாழ்த்தவல்ல வகையில், வாழ்ந்துகாட்ட வேண்டும் என்று முனைந்தான்.

ஒருவர்க்குப் புகழ்தரும் வழிகளாவன கல்வியும், செல்வமும், வீரமும், கொடையும் எனப் பலவுளவேனும், வள்ளுவப் பெருந்தகையார், "ஈதல் இசைபட வாழ்தல்" என ஈகையால் வரும்புகழிற்கு, ஏனையவற்றால் வரும் புகழ் ஈடு-இணை ஆகாது எனக்கூறியிருக்கும் உண்மையை உணர்ந்திருந்தவனாதலின், ஆடியும் பாடியும் உலகமக்களுக்கு உண்மையான இன்பத்தைத் தரவல்லவராகிய பாணர்களும், பொருநர்களும், கூத்தர்களும் புலவர்களும் மகிழ்ச்சிமிகு வாழ்வினரானால்தான், அவரால் பிறரை மகிழ்விக்க இயலும் என்ற, மக்கள் மனவியலை உணர்ந்திருந்து, அவர்கள் மனம் நிறையும் மாநிதிகளை,அவர்களுக்கு வாரிவழங்க விரும்பினான். அம்மன்னவன், வளத்தைப்பெருக்கும் வழிகாணாது, வாரி வழங்கிக்கொண்டே வந்தால், வளம்சுருங்க வழங்குவது அற்றுப்போகும் ஆதலின், வழங்கும் அத்தொழில் இடை-

யற்றுப் போகாது என்றென்றும் தொடர்ந்து நடைபெற, வேண்டுமாயின், வழங்குவது ஒருபால் நிகழ, அவ்வளத்தைப் பெருக்கும் பணியும் பிறிதொருபால் தொடர்ந்து நிகழ்ந்து கொண்டே யிருக்க வேண்டும் என நினைந்தான். அதற்காகப் பெரும்பொருள் ஒன்றே பெற்று, பிற பண்பு எதுவும் பெருமையால் தன்னைப்பகைத்து வாழ்பவரை வெற்றிக்-கொண்டால், வீரத்தால் பெறலாகும் பெரும்புகழைப் பெற்றது போலவும் ஆகும், பெரும்பொருள் வளத்தைப் பெருக்கியது போலவும் ஆகும்என உணர்ந்தமையால், அப்பகைவர்கள்மீது ஓயாது போர் மேற்சென்று, அவர்க்குத் தொலையாப் பெருந்துன்பத்தை அளித்துவிட்டு, அவர் உடைமைகளைக் கொணர்ந்து தன் கோயிற்பண்டாரத்தைப் பெருக்கிக் கொள்வானாயினான்.

வளத்தைப் பெருக்கினான்; வளத்தோடு வீரத்தால் பெறலாகும் புகழும் வந்தடைந்தது; பெற்ற பெரும்பொருளைத் தனக்கெனப் பேணிக்கொள்ளாது வருவார்க்கு வழங்கினான்; வள்ளல் என வாழ்த்திற்று உலகம். இவ்விரண்டாலாம் பெரும்புகழ் தன்னை வந்தடைந்தது என்றாலும், அதுவே தன்னைச் சிறந்தவனாக்கிவிடாது; ஒருவன் பால் வீரம் இருந்தது; அதைப் பயன் கொண்டு பெரும்பொருள் ஈட்டினான். தன் தேவைக்கு மேலும் வந்து குவிந்து விட்டமையால் வேண்டுவார்க்கு வழங்கினான். ஆக இவ்விரு செயலாலும் ஒரு பெரும்புகழ் உண்டாகிவிடாது என்றே உலகம் கூறும்; ஆகவே, இப்புகழோடு பண்புடைமையும் தன்பால் வந்து பொருந்தவேண்டும்; அந்நிலையிலேயே பெரியார்கள் தன்னைப் புகழ்ந்து வாழ்த்துவர் என உணர்ந்தான்; கற்பன அனைத்தும் கற்றுக் கல்விக்கரை-கண்டான்; பணியும் என்றும் பெருமை; வளையும் வேய் நிமிரும் என்ற பேருண்மை வழிநின்று பெரியோர்களைப்

பணிந்து ஒழுகினுன்; கற்றும், கற்றுரைத்தலைப்பட்டும் அவன் உள்ளம் பண்பட்டுவிட்டது; அதனுல், உள்ளத்தையும், அது உணர்த்தும் வழியில் தொழிற்படும் ஏனைய உணர்வுகளையும் அதுஅது விரும்பும் வழிகளில் போகவிடாது, தீ நெறியிற்-செல்லாது நன்னெறியில்மட்டுமே செல்லுமாறு போக-விடுவதே உண்மையான அறிவிற்கு அழகாம் என உணர்ந்து அவ்வுயர்ந்த அடக்கநெறியை உரமாகப்பெற்று உயர்ந்தான். அந்நிலையில், அவன் சாலவும் சிறந்தவனுகவே, அவனைக் காணும் உயர்ந்தோர் ஒவ்வொருவரும், தம்உளமார வாழ்த்தத் தலைப்பட்டனர்.

இவ்வாறு சிறந்தோர் வாழ்த்த செம்மாந்து வாழ்ந்திருந்த சேரலர் கோவாம் களங்காய்க்கண்ணியனேடு, நெருங்கிப் பழகும் வாய்ப்பினைப் பெற்றமையால், புலவர் காப்பியாற்றுக் காப்பியனுர்க்கு, அவன்பால் அடங்கிக் கிடக்கும், வேறுஇரு பண்புகளும் புலப்பட்டன. புறநாடு புகுந்து பகைவென்று பொருள் ஈட்டிப் புகழ்பெருக்கும் பேரரசர்பால், அதற்குத் துணைபுரியும் பெரும்படை இருந்தால் மட்டும் போதாது; பெரும்படையோடு புறத்தே சென்று பலநாள் தங்கிப் போரிட்டு வருவது, தன்அகநாட்டில் அமைதி நிலவும் அரசியல் வாழ்க்கையைப்பெற்ற அரசர்க்குமட்டுமே ஆகும்; அவ்வரசியல் அமைதி, நாட்டு மக்கள், உண்ண உணவின்றி, உடுக்க உடையின்றி, உறைய வீடின்றி அலையும் நிலையில் நிலைபெருது; நிலைகுலைந்த வாழ்வினரான அக்குடி மக்கள், அவ்வரசை நிலைகுலையப் பண்ணிவிடுவர்; ஆகவே படையோடு புறம்போக விரும்பும் வேந்தன், முதற்கண் தன்நாட்டில் அமைதியை நிலைநாட்டத் தொடங்கி, தன்குடிமக்களின் தளர்ச்சிகளைத் தவிர்த்து, அவர்களுக்கு நிறைவாழ்வு அளிக்க வேண்டும்; அப்பொழுதுதான் அவனுக்கு உண்மையான வெற்றி வாய்க்கும். அவ்வரசியல் உண்மையை உணர்ந்து

தன்னுட்டுக் குடிமக்களின் தளர்ச்சியைப் போக்கி, வெற்றி கண்ட வேந்தனும் நார்முடிச்சேரலாதன் மற்ருெரு பேருண்மை யையும் உணர்ந்து மேற்கொண்டு வாழ்ந்தான்.

தன் நாட்டவர் தளர்ந்த நிலையினராதல் கூடாது என உணர்ந்து, அவர் தளர்ச்சி போக்கும் தறுகணாளனுய் நாடாண்டிருந்த அந்நல்லோன், அக்குடிமக்கள் அவ்வாறு தளர்ந்து போவதற்காம் காரணத்தைக் கண்டு, அதைத் தீர்க்காது, அவர் தளர்ச்சியைத் தீர்ப்பது என்ருல், அத்தொண்டு தொடர்ந்து நடைபெற வேண்டியதாகிவிடும். ஆகவே, அவர் தளர்ச்சியை ஒருமுறை தீர்த்துவிட்டு, மீண்டும் அவர்கள் தளர்ந்து போகாமைக்கு வழி வகுக்க வேண்டும் என்பதை உணர்ந்தான். நாடும், வளம் நிறைந்தது; நாட்டில் நிலவும் அரசும் நல்லரசு; நாட்டவரும் நல்லவர் ஆக, நாட்டவர், தாமே தளர்ந்து விடுதல் இயலாது; அவரைத் தளர்ந்த நிலையினராக்கும் அப்பணியைப் புரிவார், பிற நாட்டவரே ஆதல் வேண்டும்; பிறநாட்டு மன்னர்கள், தங்கள் படையில் பணிபுரியும் படைமறவர் உள்ளத்தில் இந்நாட்டைப் பற்றியும், இந்நாட்டு மன்னன், மக்கள் ஆகியோரைப்பற்றியும் பிழைபடு எண்ணங்களைப் புகுத்திப் பெரும்பகையுணர்வை வளர்த்துவிட்டு இருக்கிருர்கள்; அப்படை மறவர்கள், அப்பகையுணர்வு மிகுதியால், உண்மை நிலையிலிருந்து பிறழ்ந்து இந்நாட்டின் மீது மாரு வஞ்சம் பூண்டு வாழ்கின்ருர்கள்; அதனுல் இந்நாட்டின் மீது ஓயாப் போர்மேற்கொண்டு, இந்நாட்டு மக்களுக்குத் தொல்லைபல தருகின்றனர். அவர் தொல்லைக்கு உள்ளாகி இந்நாட்டவர் தளர்ந்து நிலைகெடுகின்றனர்; ஆகவே இவர்தளர்ச்சி போக வேண்டுமாயின், பகைநாட்டுப் படை மறவர்களின் பகை-யுணர்ச்சி மாறவேண்டும்; அதுதானுகவே மாருது; அதை மாற்ற வேண்டும்; மாற்ற வேண்டுமாயின், தன்படையால்

அவரைப்பாழ் பண்ணுவது கூடாது; அதற்கு மாறாக அவர் மனம் தானே மாறும் வகையில் அவரை மதித்து நடாத்துதல் வேண்டும். அதை, அவர்களை அவர் நாட்டிலேயே வைத்து முடித்தல் இயலாது; அவர்களைக் கைபற்றிக் கொணர்ந்து இந்நாட்டில் வைத்தே, முடித்தல் கூடும் என உணர்ந்திருந் தமையால், நார்முடிச்சேரல், தன் நாற்படையோடு சென்று பிறநாட்டுப்பேரரண்களைப் பாழ்பண்ணி, வெற்றி கொள்ளும் போதெல்லாம் அவ்வரண்களைக் காத்து நிற்கும் அவ்வவ்-நாட்டுப் படைமறவர்களை கைப்பற்றிக் கொணர்வதையும், கொணர்ந்து, தன் நாட்டு மக்கள் பால் அன்னோர் கொண்டிருக்கும் தவறானவெறுப்புணர்ச்சி தானேஅழிந்து போகும் வகையில் அவர்க்கு நல்வாழ்வு அளிப்பதையும் வழக்கமாகக் கொண்டு விளங்கினான்.

இவ்வாறு, தன்நாட்டுக் குடிமக்களுக்குத் தன்னாலும், தன் பகைவராலும் உளவாகும் தளர்ச்சிகளைப் போக்கி அமைதி நிலவும் நல்லரசு நாடாத்தும் நார்முடிச்சேரல், இந்நிலத்து அரசர்க்கெல்லாம் எடுத்துக்காட்டவல்ல நல்ல அரசனாதல் அறிந்த காப்பியாற்றுக் காப்பியனார், அவன் இவ்வுலகத்தவர் பொருட்டு நிறைவாழ்வு உடையனாதல் வேண்டும் என்று விரும்பினார்; அதனால், தம் பாடல் கேட்டு மகிழ்ந்து, தம்மைப் பெருவாழ்வில் இருத்த, அவன் வழங்கிய வற்றாப்பெருவளம் கண்டு அவ்வளத்தை வாழ்த்திய புலவர், அவ்வளம்வழங்கும் அவன் வாழ்வும் நெடிதுவாழ, வாழ்த்துரை பலப்பல வழங்குவாராயினர்.

ஒருவேந்தனுக்கு, உண்மையான வெற்றி, அவன் நாற்படையில் இல்லை; அது அவன் நாட்டு மக்களின் அமைதி பெருவாழ்விலேயே உளது ஆதலின், களங்காய்க்கண்ணியான் தன்நாட்டு மக்களின் தளர்ச்சி போக்கிய தாளாண்மையினை

வெற்றிதரு வெற்றியாம் எனக்கூறிய சிறப்பால், அப்பொருள் அளிக்கும் **வலம்படு வென்றி** என்ற தொடரே, அப்-பாட்டிற்குப் பொருந்தும் பெயராய் அமைந்துளது.

**27.** "வாழ்க நின்வளனே! நின்னுடை வாழ்க்கை!
வாய்மொழிவாயர் நின் புகழ் ஏத்தப்
பகைவர் ஆரப் பழங்கண் அருளி,
நகைவர் ஆர நன்கலம் சிதறி
ஒன்று அவிந்து அடங்கிய செயிர்தீர் செம்மால்!
வான்தோய் நல்லிசை உலகமொடு உயிர்ப்பத்
துளங்குகுடி திருத்திய **வலம்படு வென்றியும்**
மாஇரும் புடையல் மாக்கழல் புனைந்து
மன்எயில் எறிந்து மறவர்த் தரீஇத்
தொன்நிலைச் சிறப்பின் நின்நிழல் வாழ்நர்க்குக்
கோடற வைத்த கோடாக் கொள்கையும்
நன்று பெரிது உடையையால் நீயே
வெந்திறல் வேந்தே! நீ இவ்வுலகத் தோர்க்கே"

**துறை: செந்துறைப் பாடாண்பாட்டு**
**வண்ணம்: ஒழுகு வண்ணம்**
**தூக்கு: செந்தூக்கு**
**பெயர்: வலப்படுவென்றி**

செம்மால்! (5) வென்றியும் கொள்கையும் உடையை; ஆகவே உலகத்தோர்க்கு, நின் வளனும் வாழ்க்கையும் வாழ்க என முடிக்க.

உரை :- வாய்மொழி வாயர் = என்றும் வாய்மையே வழங்கும் நாவினராகிய நல்லோர். நின் புகழ் எத்த = உன் புகழைப் பாராட்டிப் பரவுமாறு. ஆரப் பழங்கண் அருளி

= பகைவர்க்கு நிரம்பவும் துன்பத்தை அளித்து. நகைவர் ஆர நன்கலம் சிதறி = பாணர் முதலாம் இரவலர்க்கு நிரம்பவும் நல்லபல அணிகலன்களை வரையறையன்றி வழங்கி. ஆன்று அவிந்து அடங்கிய = கல்வி கேள்விகளால் நிறைந்து, பணியத்தகும் பெரியோர்களைப் பணிந்து, புலன் அடக்கமும் பெற்ற. செயிர்தீர் செம்மால் = குற்றத்தின் நீங்கி விளங்கும் மக்களிற் சிறந்த மாண்புடையோய்! வான்தோய் நல்லிசை = இதனுல் தோன்றி வானளாவப் பரந்து விளங்கும் உன் புகழ். உலகமொடு உயிர்ப்ப = உலகம் உள்ளளவும் நின்றுவாழ. துளங்கு குடி திருந்திய = தளர்ந்த குடியினரைத் தளர்ச்சி போக்கி வாழ்வித்த. வலம்படு வென்றியும் = வெற்றிக்கு வழிகாணும் வெற்றியும். மாஇரும் புடையல் = கரிய பெரிய பனந்தோட்டுமாலையும். மாக்கழல் = சிறந்த வீரக்கழலும். புனைந்து = அணிந்து சென்று. மன்எயில் = பகை மன்னர்களின் அழிக்கலாகா அரண்களை. எறிந்து = அழித்து. மறவர்த் தரீஇ = அவ்வரண்களைக் காத்திருந்த மறவர்களைக் கொண்டு வந்து. தொன்னிலை சிறப்பின் = பழமையான நிலைபெற்ற பெருமையோடு. நின் நிழல் வாழநர்க்கு = உன் ஆட்சியின் கீழ்வாழும் குடிமக்களுக்கு நல்வாழ்வு அளிப்பான் வேண்டி. கோடுஅற = அம்மறவர் உன் நாட்டவர்பால் கொண்டிருக்கும் வெறுப்பும் வஞ்சமும் போலும் கொடுமைக்குணங்கள் அறவே இல்லையாகும்படி. வைத்த = அம்மறவர்களை நல்வாழ்வில் வாழவைத்த. கோடாக் கொள்கையும் = கோல் கோடாமைக்குக் காரணமான கொள்கையும். நீ நன்று பெரிது உடைய = நீ மிகப் மிக பெற்றுள்ளனை. ஆகவே, இவ்வுலகத்தோர்க்கு = இவ்வுலகர்த்தவர்க்காக; நின்வளன் வாழ்க = உன்னுடைய வாழ்க்கையும் வாழ்வதாக.

# 8. பரிசிலர் வெறுக்கை

வேந்தர்களும் வியக்கத்தக்க விழுநிதி படைத்த செல்வர் பலர் உளராகவும், பரிசில்பெறு பாணர்களும் வரிசைபெறு புலவர்களும் அவர்களைப் பாடாது, களங்காய்க்கண்ணிநார்முடிச்சேரல் ஒருவனையே பாடிப்பரவுவதைக் கண்ட புலவர் காப்பியாற்றுக் காப்பியனார், செல்வர் பலராகவும் அவரைப் பாட நினையாத இவ்வுலகம், இச்சேரலைப்பாடி மகிழ்வானேன்? ஏனைய செல்வர்க்கு இல்லாத சிறப்பு இவன்பால் யாது உளது? என்ற எண்ணங்கள் எழவே, நார்முடிச்சேரலொடு நெருங்கிப் பழகி, அவன்பால் பொருந்தியிருக்கும் நல்லியல்புகளை ஒவ்வொன்றாக ஊன்றிநோக்கத் தலைப்பட்டார். அவ்வாறு நோக்கிய புலவர்க்குப் புலனான நார்முடியான் நல்லியல்புகள் எண்ணிலாதனவாம்.

தன் ஆட்சி நிலவும் நாடு அளவிறந்த பரப்புடையதாதலும் வேண்டும்; பல்வகை வளங்களையும் ஒருங்கே பெற்ற பெருமையுடையதாதலு வேண்டும் என்று விரும்பினான்; உடனே காடுகளை அழித்து நாடு கண்டான்; அந்நாட்டின் வளம் கொழிக்க, பெரிய பெரிய நீர்நிலைகள் பலப்பல எடுத்து நீர் வளத்தையும் நிலவளத்தையும் பெருக்கினான். வாணிகவளம் மிகுவதற்காம் வழிவகைகளையும் வகுத்தான். நாட்டை இவ்வாறு செம்மைப்படுத்தி சீர்செய்த சேரலாதன், வளம் மிக்கநாட்டில், வளம் பெருக்கும் வழிகளைக் காண்பதினும், அவ்வளம், பகைவர் கைப்பட்டுப் பாழ்பட்டுப்போகாதவாறு அவற்றைக் காப்பதிலேயே, வேந்தர்கள் விழிப்புடையராதல் வேண்டும் எனஉணர்ந்தான். அதனால் தன் நாற்படையை நனிமிகப் பெருக்கினான். வேந்தன் ஏவல் பெற்றதும் விரைந்து

சென்று பகையரசர்களின் பற்றற்கரிய பேரரண்களையெல்லாம் தம்கோடுகொண்டு தாக்கித் தகர்த்து, அந்நாட்டு ஆட்சி உரிமையைத் தம் நாட்டு அரசனின் உரிமையாக்கும் பெருமையையால், பொற்பூண் பூண்ட வெண்கோடுகளைக் கொண்ட வேழங்களால் மலிந்திருந்தது அவன் படை; சிவந்த பிடரியும் விரைந்த செலவும் உடைய பரிப்படையால் பெருமை பெற்ருன் அப்பேரரசன். களம்பலகண்ட காளையராம் என்பதை உணர்த்தக் கட்டிய பொற்கழலும், கைவேலைப்பாடு மிகத்தொடுத்த கண்ணியும் உடையராகிய, சேரநாட்டு மறவர்களைச் சிறக்கப் பெற்றிருந்தான். நாடு கண்டும், நாட்டை வளமுடையதாக்கியும், நாட்டையும் வளத்தையும் காக்கவல்ல நாற்படையை நல்லமுறையில் அமைத்தும், செய்ய வேண்டும் கடமைகளைச் சிறப்புறச் செய்து முடித்த களங்காய்க்கண்ணியான், பின்னர் வாழ்வின் பயன்காண முனைந்தான்; அவ்வாறு முனைந்தவன், "ஈதல் இசைபட வாழ்தல், அதுவல்லது ஊதியம் இல்லை உயிர்க்கு" என்ற உலகியல் உண்மை உணர்ந்து, பரிசிலர் ஒவ்வொருவரும் தம்மை வாழ்விக்கும் விழுநிதியாகத் தன்னை மதிக்குமாறு, அவர்க்கு வேண்டும்பொருள்களை, வேண்டுந்தோறும் வேண்டுமளவு வழங்கவல்ல வள்ளலாய்த் திகழ்ந்தான். தன் நாளோலக்கப் பேரவை, பகைநாட்டுத் தூதுவர் போலும் அரசியல் தொடர்புடையாரைப் பெருது, பாணர், பொருநர் போல்வார்க்கே இடம் அளிக்கும் பெருமையுடையதாக மாற்றி அமைத்தான். இவ்வாறு இரவலர் போலும் தொடர்பிலாதாரிடத்தெல்லாம் பேரருள் உடையனுகத் திகழ்ந்த அவன், மனைவி மக்கள் போலும் தொடர்புடையார் மாட்டுக் கொள்ளலாம் அன்புடைமையிலும் குறை செய்தா-னல்லன்; மனையும் மக்களும் ஆகிய அவன் உரிமைச் சுற்றத்தார் உள்ளம், பேரின்பம்கொள்ள அவ்வுள்ள நிறைவை உணர்த்தவல்ல உருவு நலனும் பெற்றுப் பெரு

வாழ்வு பெறும் வகையில், அவர்மீது பேரன்பு சொரிந்து, நல்ல இல்லறத் தலைவனாய் இனிது வாழ்ந்தான்.

ஒரு பெரிய நாட்டையும், அந்நாட்டைக் காத்து நிற்கும் ஒருபெரிய நாற்படையும் பணிகொண்டு பாணர், முதலாயினோர்க்குப் பெரிய துணைவனாய் வாழ வேண்டி பெரிய பொறுப்புடையவனாகிய தான், அப்பெரும் பணியைப் பழுதறப் செய்து முடிக்கவல்ல, உடல் உரமும் உடையனாதல் வேண்டும். தன்பால் அவ்வுரம் இல்லையேல், தன்கீழ்ப் பணி புரியும் நாற்படைத் தலைவர் தன் ஏவல் கேளார்; ஆகவே, அப்படைத் தலைவரைக் காட்டிலும் சிறந்த உரம் உடையனாதல் இன்றியமையாதது என்பதை உணர்ந்து, மற்போர் முதலாம் உடற்பயிற்சிகளை நாள்தோறும் மேற்கொண்டு உடல்உரத்தைப் பெருக்கி, ஆண்சிங்கம் போலும் ஆண்மையுடையனாய் விளங்கினான். பெருகியிருக்கும் உடல்உரத்தைப் பயன்இன்றிக் கழிய விடுதல் பெரும்பழியாம் ஆதலாலும், போர்ப்புண் பெறுவாழ்க்கை பயனில் வாழ்க்கையாம் ஆதலாலும், அவ்வுடலுரத்தைப் பயன்கொண்டு போர்க்களம் புகுந்து தானே போராடி, மார்பிலும் முகத்திலும் புண்பல ஏற்றுப் புகழ் பெற்றான். இவ்வாறு அனைத்து வகையாலும் சிறந்து விளங்கினமையால் அவன்பால் வசைநீங்க இசைபெருகுவதாயிற்று.

இசைபட வாழும் ஒருவன்பால், இன்பம்தரும் பொருள்கள் எண்ணற்றன வந்து குவிதல் உலகியற்கையாம்; பிறரால் பெறற்கரிய பேரின்பப்பொருள்கள் தன்பால் எளிதாக வந்து சேரும் அந்நிலையில், இப்பொருள் ஒவ்வொன்றும், ஒவ்வொரு வகை இன்பத்தைத் தருவனவாம்; ஆகவே அவற்றைத் தனித் தனியே நுகர்ந்து பேரின்பம் அடைவேனாக என்று எண்ணும் பேராசை உள்ளம் வந்து புகுந்து விடுவது, மனித இயற்கை

யாம் என்ருலும், அந்நிலையிலும் அத்தகைய பேராசைக்கு அடிமையாகித் தனக்கென வாழ்ந்து விடாமல், தான்பெறும் அப்பேரின்பத்தைப், பிறரும் பெறுவாராக எனும் பேருள்ளம் கொண்டு பிறர்க்கே வழங்கிப் பிறர்க்கென வாழும் அப்பெரு நிலை, உரம்மிக்க உடையான் ஒருவனுக்கு மட்டுமே வாய்க்கும்; அவ்வுள்ளுரத்திலும், களங்காய்க் கண்ணியான் குறையுடை-யானல்லன்; பேரின்பப் பொருள்களையெல்லாம், தன் பொருட்டு ஈட்டாது, பிறர்பொருட்டே ஈட்டிவைத்த பேராண்மையாளன் அவன்.

தனக்கென வாழாது பிறர்கென வாழ்வோர் உண்மை-யான் இவ்வுலகம் உண்டு என்று கூறுவர் ஆன்ருேர் ஆதலின், அவ்வியல்பினை ஆரப்பெற்றிருந்தமையால், களங்காய்க்-கண்ணி நார்முடிச் சேரலாதன், உலகச் செல்வர் அனைவரினும் சாலச்சிறந்து விளங்கினுன் ஆகவே, அவ்வுண்மையுணர்ந்து, அவனை உளமார வாழ்த்திப் பாராட்டினுர் புலவர் காப்பியனுர்.

பரிசிலர் விரும்பும் பொருளெலாம் அளிப்பவன் களங்காய்க்கண்ணியான். அவன் அன்பைப் பெற்ற பரிசிலர் அனைத்துப் பொருளையும், பெற்றவராவர்; ஆகவே, அவர் செல்வம் எனப்படுவது, அவனேயல்லது அவன் அளிக்கும் பொன்னும் பொருளும் ஆகா எனும், இவ்வுயரிய பொருள் அளிக்கும் பெருமை, **பரிசிலர் வெறுக்கை** என்ற தொடர்க்கே உளதாதல் உணர்ந்து, அத்தொடரால் இப்-பாவிற்குப் பெயர் சூட்டினுர்கள், அப்பாவின் நலன் துய்த்த பெரியார்கள்.

28. ''உலகத்தோரே பலர்மன் செல்வர்;
எல்லாருள்ளும் நின் நல்இசை மிகுமே!

வளம் தலைமயங்கிய பைதிரம் திருத்திய
களங்காய்க்கண்ணி நார்முடிச் சேரல் !
எயில்முகம் சிதையத் தோட்டி ஏவலின்
தோட்டிதந்த தொடிமருப்பு யானைச்
செவ்வுளைக் கலிமா, ஈகை வான்கழல்
செயலமைக் கண்ணிச் சேரலர் வேந்தே!
**பரிசிலர் வெறுக்கை!** பாணர் நாளவை !
வாள்நுதல் கணவ ! மள்ளர் ஏறே !
மையற விளங்கிய வடுவாழ் மார்பின்
வசையில் செல்வ ! வானவரம்ப !
இனியவை பெறினே தனிதனி நுகர்கேம்
தருகென விழையாத் தாவில் நெஞ்சத்துப்
பகுத்தூண் தொகுத்த ஆண்மைப்
பிறர்க்கென வாழ்தி! நீ ஆகன்மாறே''

**துறை : செந்துறைப் பாடாண் பாட்டு**
**வண்ணம் : ஒழுகுவண்ணம்**
**தூக்கு : செந்தூக்கு**
**பெயர் : பரிசிலர் வெறுக்கை**

சேரல்! வேந்தே! வெறுக்கை! நாளவை! கணவ! ஏறே! செல்வ! வானவரம்ப! நீ பிறர்க்கென வாழ்தி ஆதலான் நின் நல்லிசைமிகும் எனக் கொண்டு கூட்டுக.

உரை:- வளம் தலைமயங்கிய = பல்வகை வளங்களும் அளவின்றிப் பெருகியிருக்கும். பைதிரம் திருந்திய = நின் நாட்டை வளப்படுத்திய. களங்காய்க்கண்ணி நார்முடிச்-சேரல் = களங்காய்க்கண்ணி நார்முடிச்சேரல் எனும் பெயர் உடையோனே! எயில் முகம் சிதைய = பகைவரின் அரண் மதில்கள் அழிந்துபட. தோட்டி ஏவலின் = நின்னால் ஏவப்-

படுதலாம். தோட்டி தந்த = அந்நாட்டான் காவல் உரிமையை உனக்குத்தந்த. தொடிமருப்பு யானை = தொடியணிந்த கோடுகளைக் கொண்ட யானைப் படையும். செவ்வுளைக் கலிமா = சிவந்த பிடரியும் விரைந்த செலவும் உடைய குதிரைப்படையும். ஈகை வான்கழல் = பொன்னாலான வீரக்கழலும். செயல் அமைகண்ணி = தொகுப்போன் கைத்திறம் காட்டும் தலைமாலையும் அணிந்த. சேரலர் = சேரநாட்டு மறவரைக் கொண்ட காலாட்படையும் கொண்ட. வேந்தே = அரசர்க்கரசே! பரிசிலர் வெறுக்கை = பரிசிலரின் செல்வம் போன்றவனே! பாணர் நாளவை = பணர்கள் வீற்றிருக்கும் நாளோக்கக் காட்சி உடையாய்! வாள்நுதல் கணவ = வனப்பொளிவீசும் நுதலினளாய அரசமாதேவியாரின் அன்புக் கணவனே! மள்ளர் ஏறே = வீரர்க்குச் சிங்க ஏறு போன்றவனே. மையற விளங்கிய = போர்க்குற்றம் அற விளங்கும். வடு வாழ் மார்பின் = போரில் பெற்ற புண்விளங்கும் மார்பினையுடைய. வகையில் செல்வ = குற்றம் இல்லாத புகழ்ச்செல்வம் உடையோனே! வானவரம்ப=வானவரம்பன் எனும் வான்பெயர் உடையாய்! இனியவை பெறினே = நுகர்தற்கினிய பொருள்களைப் பெற்றவழி. தனிதனி நுகர் கேம் தருக = தனியே இருந்து தனித்தனியே உண்ணக்கடவோம் அவற்றை எமக்கே தருக. என விழையாத் தாவில் நெஞ்சத்து = என்று விரும்பாத கெடாத நல் நெஞ்சம் உடைமையால். பகுத்தூண் தொகுத்த ஆண்மை=பிறர்க்கும் பகுத்து அளிக்கவென்றே பொருளைத் தொகுத்த ஆண்மை உள்ளம் கொண்டு. நீ பிறர்க்கென வாழ்தி யாகன்மாறு = நீ பிறர்க்கென்றே வாழ்கின்றனை ஆதலின். உலகத்தோரே பலர் மன்செல்வர் = உலகத்தவருள் பலர் நிலைபெற்ற பெருஞ்செல்வராகவும். எல்லாருள்ளும் = அச்செல்வர் பலரைக் காட்டிலும். நின் நல்லிசை மிகும் = உன் நல்ல புகழ் ஒன்றே சிறந்து விளங்குகிறது.

# 9. ஏவல் வியன்பணை

பிறர்க்கென வாழும் பேருள்ளம் உடையனுய்ப், பகை-வென்று திறைகொண்டும், நாட்டின் வளம் பெருக்கிப் பொன் பெருக்கியும், ஈட்டிய பெரும்பொருள் அனைத்தையும் தனக்கே உரிமையுடையதாக மதித்து, அவற்றுலாம் பயனைத் தனித்திருந்து நுகரும் குறுகிய வாழ்வுடையனுகாது, அவற்றைப் பிறர் உடைமையாக்கிப் பிறரை வாழ்வித்தும் பெரியோனுய் வாழும் களங்காய்க்கண்ணியானின் நாளோ-லக்கப் பேரவைக்கண் வீற்றிருந்து, அவன் புகழ் உருவை அகக்கண்ணுல் கண்டும், அவன் வடிவழகைப் புறக்கண்ணுல் கண்டும் களித்திருக்கும் நிலையில், களங்காய்க்கண்ணி நார்முடிச்சேரல் எனும் அவன் பெரும்பெயர்க்கு ஒருபுடைக் காரணமாய், அவன் தலையிற்கிடந்து அழகுதரும் நார்முடியின் வனப்பினைக் கண்டார், புலவர் காப்பியாற்றுக்-காப்பியனுர்.

விளிம்பிலே மணிகள் வைத்து இழைக்கப்பெற்ற ஒரு பொன்கூடு; நார்கொண்டு பின்னப்பட்டுளது அதன் மேற்-புறம். இழைத்து வைத்தாற்போலும் புள்ளிகள் நிறைந்த கழுத்தும், குறுகிய சிறு முதுகும் உடையவாய அழகிய புருக்கள், தங்களைப் பிடிக்கக் கருதும் வேடர்கள் விரித்து வைத்திருக்கும் வலையோ எனக்கண்டு அஞ்சத்தக்க நிலையில், உலர்ந்து இலைகள் உதிர்ந்து நிற்கும் வேலமரத்தின் கிளைகளில், சிலந்திகள் தம்வாய் எச்சில்நீரால் பின்னி வைத்திருக்கும், வலையை நினைப்பூட்டும் வகையில், அப்பொற் கூட்டின் மேற்புறம், மறையுமாறு பின்னிக்கிடக்கும் அந்நாரின் செம்மையற்ற தோற்றம் மறைந்து, சிறந்து காட்டுவான்

வேண்டி, தூய வெண்நூலால் கோக்கப்பெற்ற பேரொளி-வீசும் முத்துச்சரங்கள் கிடந்து அணிசெய்யும் அம்முடியின், அமைப்பழகைக் கண்டு களிகூர்ந்த புலவர், தன்னை அணிந்து கொண்டவனுக்குத் தன்பெயரால் பெயர்சூட்டவல்ல நலம்-மிக்க அந்நார்முடியை நனிமிகப் பாராட்டினர்.

நார்முடியின் வனப்பினைக் கண்டு நயந்த புலவர், சேரலாதன் அம்முடியைப் புனைதற்குக் காரணமாய் இருந்த அந்நிலையையும், அந்நிலையில் அவன் ஆற்றிய ஆண்மைச் சிறப்பினையும் நினைந்து கொள்ளவே, களங்காய்க்கண்ணி-யானின், போர்மேற்செல்லும் பேராற்றல் சிறப்பினையும் நினைந்துகொள்ள வேண்டியதாயிற்று.

போர் முறைகளையெல்லாம் முற்றவும் கற்று, ஆற்றல்மிகு மறவளம் நிலைபெற்று விட்டமையால், தம் ஆண்மையை அனைத்துலகத்தவரும் கண்டு பாராட்ட வேண்டும் என்ற வெற்றிப்புகழ் விரும்பும் வேட்கை உடையவராய், அவ் வேட்கை உணர்த்தும் தும்பைமலர் மாலை அணிந்து, களம் புகுந்து கொடிய போர்புரியவல்லவராகிவிட்ட சிலர், அவனைப் பகைத்துக் கொண்டாராக, அது பொருத அவன், அவர் மீது அப்போதே போர் தொடுத்து விடுவன்; அவன் குறிப்பு அதுவாம் என்பதை அறிந்துகொண்ட அந்நிலையே, முரசு முழக்கும் முதுகுடிப்பிறந்த முதியோன், போர்முரசைக், கடிப்பினைக் கடிய ஒச்சி அறையத்தொடங்கி விடுவன்; போர் வந்தது எனக் கேட்டதும் பூரிக்கும் தோள் பெற்றவர் அவன் படை வீரர் ஆதலின், அவர்கள் அம்முரசொலியைக் கேட்டதுமே போர்க்களம் நோக்கிப் புறப்பட்டு விடுவர் ஆதலின், படை வீரர்களைப் போர்க்களத்திற்கு விரைந்து போக்குமாறு பணிக்கும் பெருமையுடையதாக எழும் அப்போர் முரசின் ஒலி, இடியோசைபோலும், கடிய ஓசையுடையதாக

ஒலிக்கத் தொடங்கிவிடும்; அதுகேட்ட களங்காய்க்கண்ணி யானும், போர் வேட்கை மிகுந்து, தனக்கு அடங்கிப்பணியாது, ஆற்றல்மிக்கு அலையும் அப்பகைவரின், பற்றற்கரிய பேராண் களைப் பாழ்செய்யும் பெரு வெறிகொண்டு, கருதிய உயிரைக் கைப்பற்றுதுமீளாக் கூற்றுவன்போலும் கடுஞ்சினமும் உடையனாகிப், போர்க்கோலம் பூண்டு புறப்பட்டு விடுவன்.

நார்முடிச்சேரலின் போர் வேட்கை அத்தகைத்தாதலை அறிந்திருந்த அவன் படையில் பணிபுரியும் மறவர்களும், அவனைப்போலவே போரையே விரும்பி, அதுவாய்க்கும் காலத்தை ஆர்வத்தோடு எதிர்நோக்கியிருப்பர். நார்முடிச் சேரலின் நாற்படை வீரர், ஆண்மை ஆற்றல்களில் மட்டுமே களங்காய்க்கண்ணியானைப் பின்பற்றி ஒழுகினரல்லர்; தங்கள் மன்னன்பால் காணலாம் மாண்புகள் அனைத்தையுமே தாமும்கொண்டு தலைசிறந்து விளங்கினர்; அதனால், அமர் மேற்கொண்டு சென்று அழிவுத் தொழில் புரிவதையே கடமை யாகக் கொண்ட அவர்கள், களங்காய்க்கண்ணியான் தனக்கென வாழாது, பிறர்க்கெனவே வாழும் பெரியோனாதல் கண்டு, தாமும், தம் நாடு நோக்கிவரும் பாணர் முதலாம் பரிசிலர்க்கு இல்லை எனக்கூறி அறியாராய், தம்மால் இயன்றன எல்லாம் வழங்கி, மன்னனுக்கேற்ற மறவர் எனும் மாண்புமிகு வாழ்வினராய் வாழ்ந்து காட்டும் வனப்பினையும் கண்டு, தன்னைப்போலவே, தன் படையாளரையும் தகுதி மிக்காராய் வாழப் பண்ணும் நார்முடிச்சேரலின் நல்லியல்பு களை நாவாரப் பாராட்டி மகிழ்ந்தார் புலவர் காப்பியனார்.

தன் முழக்கினைக் கேட்ட மறவரைப் போர்க்களம் போக்கும் பெருமை போர்முரசிற்கு இருப்பது அறிந்து, களங்காய்க்கண்ணியானின் கருத்தைக் குறிப்பால் உணர்ந்து கடன்ஆற்றும் அறிவுடையாரோடு, அதையும ஒப்ப மதித்து,

''வீரர்காள்! வேந்தன் போர் வேட்கை உடையனாயினான்; ஆகவே, நீவிர், இந்நிலையே போர்க்களம் புகுமின்!'' எனக் கூறிப் பணிக்கும்பணை யென்று கூறிய பாநலம் அமையப் பெற்றமையால், **ஏவல் வியன்பணை** என்ற அவ்வினிய தொடரே, இப்பாவிற்குப் பெயராகச் சூட்டப்பட்டுள்ள பெருமை பாராட்டற்குரித்து.

**29.** ''பிறர்க்கென வாழ்தி நீ யாகன்மாறே;
எமக்குஇல் என்னார் நின் மறங்கூறு குழாத்தர்;
துப்புத்துறைபோகிய வெப்புடைத் தும்பைக்,
கறுத்த தெவ்வர் கடிமுனை அலற
எடுத்து எறிந்து இரங்கும் **ஏவல்வியன்பணை**
உரும்என அதிர்பட்டு முழங்கிச் செருமிக்கு
அடங்கார் ஆரரண்வாடச் செல்லும்
காலன் அனைய கடுஞ்சின முன்ப!
வாலிதின், நூலின்இழையா நுண்மயிர் இழைய
பொறித்த போலும் புள்ளி எருத்தின்
புன்புறப் புறவின் கணநிரை அலற
அலந்தலை வேலத்து உலவை அஞ்சினைச்
சிலம்பி கோலிய அலங்கற் போர்வையின்
இலங்குமணி மிடைந்த பசும்பொன் படலத்து
அவிர் இழை தைஇ மின்உமிழ்பு இலங்கச்
சீர்மிகுமுத்தம் தைஇய
நார்முடிச் சேரல்! நின் போர்நிழல் புகன்றே'',

**துறை : வாகை**
**வண்ணம் : ஒழுகு வண்ணம்**
**தூக்கு : செந்தூக்கு**
**பெயர் : ஏவல் வியன்பணை**

கடுஞ்சின முன்ப! நார்முடிச் சேரல்! நீ பிறர்க்கென வாழ்தியாகன்மாறு, போர்நிழல் புகன்று நின்மறங்கூறு குழாத்தர் எமக்கு இல் என்ஞர் எனக் கொண்டு கூட்டுக.

உரை: துப்புத்துறைபோகிய = போர் முறைகளை முற்றக் கற்றுத் தேர்ந்தவரும். வெப்புடைத்தும்பை = தும்பை அணிந்து செய்யும் கொடிய போரில் வல்லவருமாகிய கறுத்த = உன்ஞேடு சினம் கொண்டு எழுந்த. பகைவர் = உன் பகைவர். கடிமுனை அலற = போர் முனையகத்தே கேட்டு நடுங்குமாறு. எடுத்து எறிந்து இரங்கும் = முரசடிக்கும் குறுந்தடியை ஓச்சி அடித்தலால் பேரொலி எழுப்பும். ஏவல்வியன் பணை = தன் முழக்கொலி கேட்கும் தன்படை மறவரைப் போர்க்களம் நோக்கிப் போகத் தூண்டும் பெரிய முரசம். உரும் என அதிர்பட்டு முழங்கி = இடிபோல அதிர்ந்து முழங்க. செருமிக்கு = போர்வேட்கை மிகுந்து. அடங்கார் ஆரரண்வாடச் செல்லும் = அடங்காத பகைவரின் பற்றற்கரிய அரண் பாழாகும் வண்ணம் போர் மேற்செல்லும். காலன்அனைய கடுஞ்சின முன்ப = காலன்போலும் கடுஞ்சினமும் மிகுவலியும் உடையோனே! பொறித்தபோலும் புள்ளி எருத்தின் = பொறித்து வைத்தாற் போலும் புள்ளிகள் நிறைந்த கழுத்தும். புன்புறப் புறவின் = புல்லிய முதுகும் உடையவாகிய புருக்களின். கணநிறை அலற = பெருங்கூட்டம், தம்மை வளைத்துப் பிடிக்க வேடர் விரித்து வைத்திருக்கும் வலையோ என்று எண்ணி அலறும் வகையில். அலந்தலை வேலத்து உலவை அஞ்சினை = முறிந்த தலையை உடைய வேலமரத்தின் உலர்ந்த கிளைகளில். வாலிதின் நூலின் இழையா = வெண்மையான பருத்தி நூலால் இழைக்கப் படாமல். நுண் மயிர் இழைய = நுண்ணிய மயிர் போன்ற மெல்லிய இழையை உடைய. சிலம்பி கோலிய அலங்கல் போர்வையின் = சிலந்தி தன்வாய்

எச்சிலால் தொடுத்த அசைகின்ற வலையைப்போல. இலங்கு மணிமிடைந்த பசும்பொன் படலத்து = ஒளிவீசும் மணிகள் விளிம்பிலே கோத்த, பசியபொன்றால் பண்ணிய கூட்டின் புறத்தே. அவிர் இழை தைஇ = வெண்ணிய நூல்கொண்டு தொடுத்து. மின் உமிழ்பு இலங்க = ஒளி மிகுந்து விளங்கும் வகையில், சீர்மிகு முத்தம் தைஇய=சிறந்த முத்து வடங்களால் கட்டப்பெற்ற, நார்முடிச்சேரல் = நார்முடியினை அணிந்த சேரலாதனே! நீ பிறர்க்கென வாழ்தி ஆகன்மாறு = நீ தனக்கென வாழாது பிறர்க்கென்றே வாழ்கின்றாய் ஆதலின். நின் போர் நிழல் புகன்று = உன்னுடைய போராகிய நிழலையே விரும்பி. நின் மறம் கூறு குழாத்தர்= உன்மற மாண்புகளையே மாற்றார் அறியத் தூற்றித் திரியும் உன் மறவர்களும். எமக்கு = என் போலும் இரவலர்க்கு. இல் என்றூர் = இல்லை என்று கூறுது வரையாது வழங்குவர்.

மரக்கிளைகளில், பின்னிவிடப்பட்டிருக்கும் சிலந்திக் கூட்டினைத் தம்மைப் பிடிக்க வேடன் விரித்திருக்கும் வலையோ எனப் புறு இனம் அஞ்சும் என்பதை,

''தொலைவில் வேட்டுவன் வலைபரிந்து போகிய
கானப் புறுவின் சேவல், வாய்நூல்
சிலம்பி அஞ்சின வெறுஉம்''

என்ற நற்றிணை வரிகளும் (189) உணர்த்துவது காண்க.

# 10. நாடுகாண் அவிர் சுடர்

களங்காய்க்கண்ணி நார்முடிச்சேரலாதன் அரசவைக்கண் பலநாள் வீற்றிருந்து, அவன் பெருமைகளைப் புகழ்ந்துபாடி, அவன் அளித்த பரிசிற்பொருள்களோடு, அவன் தலைநகர் விடுத்துத் தம்நகர் நோக்கி வந்து கொண்டிருந்தார் புலவர் காப்பியாற்றுக் காப்பியனார். தன் வாழ்நாளின் பெரும் பகுதியை ஓயாப் போர் மேற்கொண்டே கழித்துவிட்ட களங்காய்க் கண்ணியான், சில நாட்களாவது போர்த்தொழில் ஒழிந்து, பேரின்பம் நுகர் வான் விரும்பி, அதற்கேற்றஇடம், கவின்மிகு காட்சிகளால் நிறைந்து, அமைதி நிலவும் நேரி-மலையே எனத் தேர்ந்து, ஆங்குச் சென்று, அம்மலைக்காட்சி களில் மனம் மகிழ்ந்திருக்கத் துணிந்தான். அவனோடு சென்று, அம்மலைவளம் காண்பதில் புலவர்க்கும் விருப்பம் உண்டு என்றாலும், சேர நாட்டிற்கு வந்து நாட்கள்பல ஆகி-விட்டமையால், தம் வீடடையும் வேட்கை மிகவே, அவனோடு செல்லாது அவன்பால் விடைகொண்டு புறப்பட்டு விட்டார்.

தம் மனைநோக்கிப் புறப்பட்டு வந்து கொண்டிருந்த புலவர், சேரநாட்டின் எல்லைக்கண், பாணர் குடியில் பிறந்து, பேரியாழ் சீறியாழ் இசைகளுக்கு ஏற்பக், குரல் எடுத்துப் பாடவும் ஆடவும் வல்ல விறலியொருத்தியைக் கண்டார். விறலி வறுமைத் துயரால் மிகமிக வருந்தியவள்போல் காட்சி அளித்தாள். அவளின் மங்கல மாண்புணர்த்தும் அறிகுறி யாய், அவள் கையிற் கிடந்து ஒலிக்க வேண்டிய ஒரு சில வளைகள் அல்லது வேறு அணி எதுவும், அவள் மேனியில் கிடந்து ஒளி வீசாமையொன்றே, அவள் வறுமையின் கொடு-மையைப் புலப்படுத்துவாயிருந்தது. களங்காய்க்கண்ணி-

யானைக் காணுமுன்னர் வறுமையிற்கிடந்து உழன்று, அதன் கொடுமை இத்தகைத்து என்பதை உணர்ந்திருந்தமையால், புலவர், விறலியின் வறுமைக்குப் பெரிதும் வருந்தினர். யாம் பெற்ற இன்பம் பெறுக இவ்வையகம் என்ற பேருள்ளம் வாய்க்கப் பெற்றவராதலின், தனக்குப் பொன்னும் பொருளும் கொடுத்துப் பெருவாழ்வு அளித்த களங்காய்க்கண்ணி நார்முடிச்சேரல்பால், விறலியையும் போக்கி அவள் வாழ்விலும் வளம் காண விரும்பினர் புலவர்.

அவ்வாறு விரும்பிய புலவர், ''விறலி! சேர நாட்டகத்தே நேரி என்ற பெயருடையதொரு மலையுளது. அம்மலைவளம் காணும் வேட்கை மிகுந்த இந்நாட்டு வேந்தனும், நார்முடிச்சேரலாதன், தன்னைப்பாடிப் பரிசில்பெற வந்து குழுமியிருக்கும் இரவலர் கூட்டத்தோடு, அம்மலைச்சாரலில் தங்கியுள்ளான்' ஆங்கு, உண்டார் உள்ளத்தில் இன்பத்தை மிகுவிப்பதல்லது, அவர் மதியைத் திரித்து, மாண்பிழக்கப் பண்ணாத வகையில், களிப்பு மிகுவிக்கும்பொருள்களைப் பெருகக் கலவாது, அளவே கலந்து நார்கொண்டு அரித்துத் தெளித்த மதுவை, இரவலர்க்கு வேட்கை தீருமளவு தந்தும், பழச்சாற்றில் நறுமணமலர்கள் இட்டு, நறுமணம்ஊட்டிய நறவினைத், தான் பருகியும் மகிழ்ந்து கிடக்கும் அம்மன்னவன்பால் இப்போதே செல்வாயாக! சென்றால், கைவளை அல்லது வேறு அணிகாணா உன்மேனியின் ஒவ்வோர் உறுப்பிலும், உரிய அணிகளை அணிவித்து அழகு செய்வன். அந்நிலையில், பச்சிளம் இலைகளுக்கு இடையிடையே பொன்னிற மலர்களால் நிறைந்து பொலிவுபெற்று நிற்கும் வேங்கை மலர்போலும் வனப்புடையளாகி விளங்கித் தோன்றுவை. நார்முடிச்சேரல், உன்னை மட்டுமே அவ்வாறு நலம் செய்வன் என்று எண்ணற்க; உன்னைத் தொடர்ந்து உன்பின் திரியும் மகளிர் அனைவரையுமே அம்மாண்புமிகு நிலையில் நிறுத்துவன்;

அம்மட்டோ! உன் உறவினராய் உன்னுடன் வரும் பாணர்க்குப், பொன்னுல் பண்ணிய தாமரை மலர்களை அளித்து அன்பு காட்டுவன்; உனக்கும், உன் சுற்றத்தினர்க்கும் குற்றேவல்புரிந்தவாறே உடன்வரும் இளையோர்க்கு, அவர் விரும்பும் மதுவை வேண்டுமளவு வழங்குவன்; இவ்வாறு அவனுல் சிறப்பிக்கப் பெற்றமையால் சிந்தை மகிழ்ந்து அவனை வாழ்த்துவீராயின், அதுகேட்டு மகிழும் அவன், தோட்டி துணைசெய்யப், பாகர்ஏவும் ஏவலைத், தட்டாது நின்று தொழில்புரிந்து அப்பெருமையால், தம் தந்தங்கள் பொற்பூண்சூட்டப் பெறுவது கண்டு, அக்களிப்பு மிகுதியால், பொன்னிறத் தீப்பொறிகள் வானளாவ எழுந்து படர, நாட்டுமக்கள் தம் நாட்டகத்தே நின்று நோக்கினும் காணலாம் வகையில், வானுற எழுந்து எரியும் காட்டுத்தீ போலும், தம்கொடுமையைக் கைவிட்டுக், கடமைநெறிநிற்கக் கற்றுக்கொண்ட, வலிமிக்க களிறுகளைக், கணக்கின்றித் தந்து அனுப்புவன்; ஆகவே, விறலி! உன் வறுமை தீரவேண்டின், அவன் பால் விரைந்து செல்வாயாக!'' என்று கூறினுர்.

புலவர் கூறிய பொருள்பொதிந்த உரைகளைக் கேட்ட விறலி, தன்வறுமை அப்போதே தீர்ந்து விட்டது போல் மகிழ்ந்தாள். அம்மகிழ்ச்சி மிகுதியால், அவள்அளிக்கும் பொற்பூண்பூண்டு பொலிவுபெற்றுத் திகழும், தன்மேனிக்கு உவமையாகப், புலவர் காட்டிய வேங்கைமரத்தின் வனப்பினைக் காண்பான் வேண்டி, தாங்கள் இருந்து உரையாடும் ஆங்கே வளர்ந்திருந்த, வேங்கையை நோக்கிய விறலி, அவ்வேங்கைக்கு அணித்தாகநிற்கும், உன்னமரத்தைக் காணவே, அவள் உள்ளமகிழ்ச்சியெல்லாம் ஒரு நொடியில் மறைந்து விட்டது. களங்காய்க் கண்ணியானுக்குரிய நாட்டகத்தே நிற்கும் அவ்வுன்ன மரம், வாடிஉலர்ந்து கிடந்தது; உன்னம் தழைத்தால், அந்நாட்டிற்கு உரியோனும் தழைப்பன்; அது

உலர்ந்தால் அவனும் வாழ்விழந்து போவன் என்ற உலகியல் உண்மையை, விறலி உணர்ந்திருந்தமையால், களங்காய்க் கண்ணியானைத், தான் சென்று காண்பதற்கு முன்னரே, அவன் கேடுற்றுப் போய்விடுவனோ என்று எண்ணிக் கவலை கொண்டாள்; சற்றுமுன் மகிழ்ச்சிக்குறிகாட்டிய அவள் முகம், திடுமெனக்கவலையில் தோய்ந்து விட்டதையும், அவள் கண்ணோக்கு. உன்னத்தில் சென்றிருப்பதையும் கண்ட புலவர்க்கு, அவள் மனத்தடுமாற்றம் புலனாயிற்று. அதனால், விறலியை நோக்கிப் பின்வருமாறு கூறினார்.

''விறலி! உன்னம் கரிந்துகாட்டுகிறது என்பது உண்மை: உன்னம் கரியின் மன்னர்க்குக் கேடாம் என்பதே உலகியலாம் என்பதும் உண்மை; ஆனால் களங்காய்க்கண்ணியான், உன்னம் காட்டும் நிமித்தத்தையும் மாற்றவல்ல ஆற்றல் வாய்ந்தவனாவன். அவன் ஆற்றல் புலப்படுத்தும் சில அரிய நிகழ்ச்சிகளைக் கூறுகிறேன், கேட்பாயாக! நார்முடிச்சேரல் நனிஇளையனாய் இருக்கும்போது, சேரர்குலத்தோடு தொடர்புடையவராக மதித்து, அச்சேரர்க்குரிய பனந்தோட்டு மாலையை அணிந்து கொண்ட மன்னர் சிலர், அப்பனந்தோட்டோடு, சேரர்க்குரிய முடியையும் கைப்பற்றிக்கொண்டனர்; ஆண்டுகள் பல கழிந்தன; களங்காய்க்கண்ணியான் வளர்ந்து கட்டிளம் பருவத்தனாயினன்; அந்நிலையில் சேரகுலத்தவர்க்கும் சேரநாட்டு அரியணைக்கும் நேர்ந்த சீர்கேட்டினை அறிந்தான்; அவ்வளவே, ''என்குலத்தவர்க்குரிய கண்ணியையும் முடியையும் கைப்பற்றும் வரை, களங்காய்க்காய்க்கண்ணியும், நார்முடியுமே, நான்சூடும் கண்ணியும் முடியும் ஆகுக, என வஞ்சினம் உரைத்து, அவற்றை மீட்கலாம் வழிவகைகளை வகுக்கத் தலைப்பட்டான். தன் நாற்படையை நனிமிகப்பெருக்கினான். தன்படையில் பணிபுரிவார் அனைவரும் போர்ப் புண்பெற்ற புகழ்மிகு தோள் பெற்றவராதல் வேண்டும் என

விரும்பி, அத்தகையாரையே தேர்ந்து பணிகொண்டான்; இவ்வகையால் பண்பும் பெருமையும் மிக்கதாகப் படை அமைந்துவிடவே, பகைவர் மீது போர்தொடுத்துப் போர்ப்பூ அணிந்து புறப்பட்டு, பகைவர்தம் பாசறைக்கு அணித்தாக உள்ள, கரந்தைக்கொடி படர்ந்திருக்கும் வயல்களில் பாடி அமைத்து விட்டான். அது அறிந்த அவன் பகைவர்களும், தம் நாற்படையோடு போர்க்களம் புகுதற்கு வேண்டும் பணி களை மேற்கொண்டனர்; அந்நிலையில், அவர் படைகளைத் தலைமை தாங்கி நடாத்திச் செல்லும் படைத்தலைவர்கள், அவ்வரசர்களை அணுகி, ''ஐயன்மீர்! போர்முரசு முழங்கப், படையோடு புறப்பட்டு வந்து, வயல்வெளியில் பாடிகொண்டு விட்டான் நார்முடியான்; இந்நிலையில், அவனால் நமக்கு வரும் கேட்டினைப்போக்கி நம்மைக் காக்கவல்ல படைத்துணை அளிப்பார் ஒருவரும் இலர்; ஆகவே போர்விரும்பும் ஒரு சிலரோடு புறப்பட்டு அவன் நிற்கும் போர்க்களம் நோக்கிப் போகாதீர்கள்; போவதே உம் விருப்பமாயின், வருவானை உடன் கொண்டு செல்லுங்கள்; யாம்வாரேம்'' என்றுகூறிப் போருக்குப் புறப்பட மறுத்து விட்டனர்; படைத்தலைவர் மறுக்கவே, அம்மன்னர்கள் செய்வது அறியாது செயலொழிந்து கிடந்தனர்! இதை அறிந்தானாயினும், இன்று அடங்கிப் போகும் இவர்கள், பிறிதொருகால் போர்தொடுத்து எழினும் எழுவர்; அதுமட்டுமன்று, போரைக் கைவிடுவதாயின், கண்ணியையும் முடியையும் கைப்பற்றுவது இயலாது; வஞ்சினம் பொய்த்து விடும். ஆகவே, அவர் அடங்கியிருப்பினும், அவர் அரணை அழித்து வெற்றிக்கோடல் வேண்டும் எனத்துணிந்து களம்புகுந்து கடும்போர் புரிந்து, அவர்களை அறவே அழித்து வெற்றிகொண்டான்; அவர் ஆட்சியின் அவலநிலைக்கு அஞ்சி நாடகன்று வாழ்வார் அனைவரையும் வரவழைத்து வாழ்வளித்தான்; தான் பெற்ற வெற்றி குறித்து விழாக்கொண்டாடி மகிழ்ந்தான்.

''விறலி! அவன் பேராற்றலைப் புலப்படுத்த இந்நிகழ்ச்சி-யொன்றேபோதும்!என்றாலும், பிறதொன்றும் கூறுகின்றேன். தன்குலத்தவர் எனத் தருக்கித்திரிந்த பகைக்குலத்தவரை வென்று, அவர் கவர்ந்து சென்ற சேரநாட்டின் செல்வமாம் பனந்தோட்டுக் கண்ணியையும் நவமணிப் பொன்முடியையும் மீளவும் பெற்றதோடு அமையாது, அப்பகையரசர் எழுவர்க்கும் உரிய பொன்முடிகளைக் கைப்பற்றி, அவற்றை அழித்து, அழகிய ஓர் அணியாக்கி, அந்த அணியைத் தன்அகன்றமார்பில் அணிந்து காட்டிய அக்களங்காய்க்-கண்ணியான், தன் வெற்றிப் புகழை மேலும் பெருக்குவான் விரும்பி, பொன்வளம் கொழிக்கும் கொண்காணமலைக்கு உரியவனும், பொற்றேர்மீது பொலிவுபெற அமர்ந்து உலா-வருவோனும், அக்கால மறவரெல்லாம் கண்டு அஞ்சத்தக்க ஆற்றல் மிக்கவனும் ஆகிய நன்னன்மீது போர்தொடுத்துச் சென்று, அவன் காவல் மரமாம், வாகைமரத்தை வேரற்றுப்-போக வெட்டி வீழ்த்தி வெற்றிகொண்டு வீறுபெற்றான். ஆகவே, விறலி! உன்னம் காட்டும் இவ்வாகாநிமித்தம் அவனை ஒன்றும் செய்து விடாது; உன்னம் தீக்குறி காட்டுகிறது என்பதை அறிந்தும், அதனால் தனக்கு எக்கேடும் வந்துறாது என்ற தளராத உறுதிமிகு உள்ளம் கொண்டே, உளம்-மகிழும் உறைவிடம் நோக்கிச் சென்றுளான்; ஆகவே விறலி! உனக்கு அவ்வச்சம் வேண்டாம்; அவன்பால் இப்போது விரைந்து செல்வாயாக!''

இவ்வாறு கூறி, புலவர் காப்பியாற்றுக் காப்பியனார் பாடிய இவ்விறலியாற்றுப்படைச் செய்யுளில், காட்டில் பிறந்து, பரந்து வானுற உயர்ந்து, காட்டிற்குச் சேணெடும் தொலைவில் உள்ள நாட்டில் வாழ்மக்கள், தாம் இருக்கும் இடத்தேஇருந்து நோக்கினும் காணலாம் அளவில், பெருகிய பெருந்தீ எனும் அரிய பொருள்நயம், தோன்ற சுருங்கிய

வாய்பாட்டால் வந்து நிற்கும் "நாடுகாண் அவிர்சுடர்" என்ற தொடரின் நலம்கண்டு, அவ்வாற்றுப் படைக்கு அதையே பெயராக ஆக்கினார்கள் ஆன்றோர்கள்.

30 "போர்நிழல் புகன்ற சுற்றமொடு ஊர்முகத்து
இறாஅலியரோ பெரும ! நின்தானை;
இன்னிசை இமிழ்முரசு இயம்பக், கடிப்பு இகூஉப்
புண்தோள் ஆடவர் போர் முகத்து இறுப்பக்
காய்ந்த கரந்தை மாக்கொடி விளைவயல்
வந்து இறை கொண்டன்று தானை; அந்தில்
களைநர் யார் இனிப் பிறர் எனப் பேணி
மன்எயில் மறவர் ஒலிஅவிந்து அடங்க,
ஒன்னார் தேயப், பூமலைந்து உரைஇ,
வெண்டோடு நிரைஇய வேந்துடை அருஞ்சமம்
கொன்று புறம் பெற்று, மன்பதை நிரப்பி
வென்றியாடிய தொடித்தோள் மீகை
எழுமுடி கெழீஇய திருஞெமர் அகலத்துப்
பொன்னம் கண்ணிப் பொலந்தேர் நன்னன்
சுடர்வீ வாகைக் கடிமுதல் தடிந்த
தார்மிகு மைந்தின் நார்முடிச்சேரல்,
புன்கால் உன்னம் சாயத், தெண்கள்
வறிது கூட்டரியல் இரவலர்த் தடுப்பத்
தான் தரஉண்ட நனைநறவு மகிழ்ந்து
நீர் இமிழ் சிலம்பின் நேரியோனே;
செல்லாயோ தில் சில்வளை விறலி !
மலர்ந்த வேங்கையின் வயங்கிதழ் அணிந்து
மெல்லியல் மகளிர் எழில்நலம் சிறப்பப்,
பாணர் பைம்பூ மலைய, இளையர்
இன்களி வழாஅ மென்சொல் அமர்ந்து
நெஞ்சுமலி உவகையர் வியன்களம் வாழ்த்தத்,

தோட்டி நீவாது தொடிசேர்பு நின்று
பாகர் ஏவலின் நுண்பொறி பிசிரக்
காடுதலைக் கொண்ட **நாடுகாண் அவிர் சுடர்**
அழல் விடுபு மரீஇய மைந்தின்
தொழில் புகல்யானை நல்குவன் பலவே’’.

**துறை : விறலியாற்றுப் படை**
**வண்ணம் : ஒழுகு வண்ணம்**
**தூக்கு: செந்தூக்கு**
**பெயர்: நாடுகாண் அவிர் சுடர்**

‘‘ஆடவர் போர் முகத்து இறுப்ப, தானை இறை கொண்டன்று: பெரும! ஊர்முகத்து இருஅலியர்; களைநர் யார்இனி’’ என மறவர் அடங்க, ஒன்னார்தேய, வேந்துடை அருஞ்சமம் கொன்று, மன்பதை நிரப்பி, வென்றியாடிய மீகையினையும், அகலத்தினையும், தடிந்த மைந்தினையும் உடைய சேரல்! உன்னம் சாய, கள் இரவலர் தடுப்ப, நறவு மகிழ்ந்து நேரியோனே; மகளிர் நலம் சிறப்ப, பாணர் பூமலைய இளையர் வாழ்த்த, யானை நல்குவன்; விறலி செல்லாயோ! எனக் கொண்டு கூட்டிப் பொருள் கொள்க.

உரை:- புண்தோள் ஆடவர் = போர்ப்புண் பெற்ற தோளினராகிய வீரர்கள். இன்னிசை இமிழ் முரசு இயம்ப= இனிய இசையெழுப்பும் போர் முரசு ஒலிக்குமாறு. கடிப்பு இகூஉ = குணில் ஒச்சிப் புடைத்துக் கொண்டே. போர் முகத்து இறுப்ப = போர்க்களத்தே வந்து தங்க. தானை= களங்காய்க்கண்ணி நார்முடிச்சேரலின் நாற்படை. காய்த்த கரந்தை மாக்கொடி விளைவயல் = காய்த்த கரந்தையின் கரியகொடி படர்ந்திருக்கும் விளைவயலில். இறைகொண்டன்று = வந்து தங்கிவிட்டது. பெரும = பேரரசர்களே!

போர்நிழல் புகன்ற சுற்றமொடு = போரால் உண்டாம் புகழ் விரும்பும் உம் சுற்றத்தாரோடு. நின் தானை ஊர்முகத்து இருஅலியர்=உம் நாற்படை, அவன் வந்து தங்கியிருக்கும் பாசறைக்கு அணித்தாகச் சென்று தங்காது ஒழிவதாக. இனிக் களைநர் யார் பிறர்=தங்கிவிட்டால் நம் துயரைக் களையவல்ல துணையரசர் யாவர் உளர் ஒருவரும் இலர். என=என்றுகூறி. பேணி = படைதொடாமையை மேற்கொண்டு. மன்எயில் மறவர்=மாற்றரசர்களின் அரண்களைக் காத்து நிற்கும் படைத்தலைவர், ஒலி அவிந்து அடங்க=போர் ஆரவாரம் ஒழிந்து அடங்கி விட்டாராக. ஒன்னார் தேய=பகைவர் அழிந்து போகுமாறு. பூ மலைந்து உரைஇ=போர்ப்பூ அணிந்து, வெண்தோடு நிரைஇய வேந்துடை அருஞ்சமம்= வெள்ளிய பனத்தோட்டு மாலை அணிந்த சேரர் குலத்தவர் எனக்கூறப்படும் வேந்தர்களுடைய. அருஞ்சமம் கொன்று = வெல்லற்கரிய போரைவென்று. புறம் பெற்று = அவர்களைப் புறங்காட்டப்பண்ணி. மன்பதை நிரப்பி = அப்பகைவர்க்கு அஞ்சி நாடுவிட்டு அகன்றுரை மீட்டும் கொணர்ந்து வாழச் செய்து. வென்றியாடிய கொடித்தோள் மீகை = வெற்றி விழாக்கொண்டாடிய, தொடியணிந்து மேம்பட்ட கையினை-யும். எழுமுடி கெழீஇய திருஞெமர் அகலத்து=பகைவர்களில் ஏழு அரசர் முடிகளை அழித்துப் பண்ணிய அணிகிடந்து அழகு செய்யும், வெற்றித் திருமகள் விரும்பும் அகன்ற மார்பினையும். பொன்னம் கண்ணி = பொன்னாலான தலைமாலையினையும். பொலந்தேர் = பொன்னாலான தேரும் உடைய. சுடர்வீ வாகைக் கடிமுதல் தடிந்த = ஒளிவீசும் மலர்கள் நிறைந்த வாகை மரத்தை வேரோடும் வெட்டி அழித்த. தார்மிகு மைந்தின் = தூசிப் படையோடு செல்லவல்ல பேராண்மை யினையும் உடைய. நார்முடிச் சேரல்=நார்முடிச் சேரலாதன். புன்கால் உன்னம் சாய = புல்லிய அடிமரத்தையுடைய உன்னம் உணர்த்தும், நிமித்தம்கெட்டழியும் வகையில்,

தெண் கள் = தெளிந்த கள்ளில். வறிது கூட்டு அரியல் = கலத்தற்குரிய பொருள்களைக் களிப்புமிக்கு விடாதபடி, அளவே கலந்து ஆக்கிய வடித்தெடுத்த கள். இரவலர்த்தடுப்ப = தன்னை உண்டு மகிழும் இரவலரை வேறுஇடம் செல்ல விடாது தடுத்து நிறுத்த. தான் = நார்முடிச்சேரலாதன். தர உண்ட நனை நறவு மகிழ்ந்து = ஏவல் இளையர் தர, உண்ட பழச்சாறும், மலர்மணமும் கலந்து ஆக்கிய நறவால் களிப்பு மிக்கு. நீர் இமிழ் சிலம்பின் நேரியோனே = நீர் வீழ்ச்சிகள் ஒவென ஒலிக்கும் நேரிமலைச்சாரலின் கண் உள்ளான். சில்வளை விறலி = ஒரு சில வளையல்களே அணிந்து வறுமைநிலை தோன்ற வந்து நிற்கும் விறலி! மெல்லியல் மகளிர்=உன் உடன்வந்திருக்கும் மென்மையான இயல்பினராம் இளம் மகளிர். வயங்கு இழை அணிந்து = விளங்கும் அணிகள் பலபூண்டு. மலர்ந்த வேங்கையின் = மலர்களால் நிறைந்திருக்கும் வேங்கை மரம்போல். எழில் நலம் சிறப்ப = பேரழகுடையராகிப் பெருமையுறவும். பாணர் பைம்பூ மலைய = பாணர் பொற்றாமரைப் பூச்சூடவும். இளையர்=இளையோர். இன்களிவழா மென்சொல் அமர்ந்து = கள்ளுண்டலால் பெற்ற இனிமைப் பண்பு கெடாத மெல்லிய நல்ல சொற்களையே விரும்பி. நெஞ்சுமலி உவகையர் = மனம் நிறைந்த மகிழ்ச்சி உடையராகி, வியன் களம் வாழ்த்த =போர்க்களத்தே அவன் பெற்ற வெற்றிகளை எடுத்துக் கூறி வாழ்த்த. தோட்டி நீவாது = பாகர், தோட்டியால் உணர்த்தும் குறிப்புத் தவறாமல், தொடி சேர்பு நின்று = கோட்டில் தொடியாகிய பொற்பூண் பொருந்த நின்றே. பாகர் ஏவலின் = பாகர் ஏவுதலால். ஒண்பொறி பிசிர = ஒள்ளிய செந்நெருப்புப் பொறிகள் சிதறிப் பறக்க, காடு தலைக்கொண்ட = காட்டிடத்தே பற்றிக்கொண்ட. நாடு காண் அவிர் சுடர் வீசும் = நாட்டவர், தம் நாட்டகத்தே நின்றும் காணுமாறு ஒளிவிட்டுச் சுடர் வீசும் பெருந்தீப்

போலும். அழல் விடுபு = சினமாகிய தீயை விடுத்து. மரீஇய மைந்தின் = பெற்ற பெருவலியோடு கூடிய. தொழில் புரியானை=நாம் ஏவும் தொழில்களை விரும்பி மேற்கொள்ளும் யானைகள். நல்குவன்பல = பலவற்றைப் பரிசிலாக அளிப்பான். ஆகவே, செல்லாய் — அவன்பால் செல்வாயாக. எ. று.

# இணைப்பு : பாடற்பண்பு

காப்பியாற்றுக்காப்பியனார் பாடிய பாக்கள், களங்காய்க் கண்ணிச் சேரலாதனைப் பாடிய பதிற்றுப் பத்து, நான்காம் பத்தில் இடம்பெற்ற பத்துப்பாடல்களே. ஆயினும், அப்பாக்கள் அளிக்கும் பாநலம் நயந்து பாராட்டற்கு உரியது.

புலவர் பாடிய பாக்கள் பத்தே எனினும், அவற்றில் அவர் ஆண்டிருக்கும் உவமை அணிநலங்கள் எண்ணில; அவற்றுள் ஒருசிலவற்றின் நயத்தை ஈண்டு நுகர்வாம்.

தான் பிறந்த சேரர் குலத்துவந்த தன்முன்னோர்கள், யாது காரணத்தாலோ, நிலையில் தாழ்ந்து போக, அவர் வாழ்க்கையில் இருள் சூழ்ந்து கொண்டிருந்த நேரத்தில், தான் பிறந்ததும், தன் ஆண்மைப் பேரொலியால், அவர்களின் துயர்துடைத்து அவர் வாழ்க்கையில், சூழ்ந்துகிடந்த துன்ப இருளைப்போக்கி, ஒளிவீசச் செய்த களங்காய்க்கண்ணியானுக்கு, இராக்காலத்தில் மையிருள் எனக்கூறும் காரிருள் சூழ்ந்து கிடந்ததாகக், கீழ்வானத்தில் தான் தோன்றி, அம் மையிருளைக் கெடுத்துப் பேரொளிகாலப் பண்ணும் இருகோடும் கூட முழுவடிவம் பெற்ற முழுத்திங்களை உவமை காட்டியிருப்பது, அவற்றுள் ஒன்று.

''மணிநிற மையிருள் அகல, நிலாவிரிபு
கோடுகூடு மதியம் இயல்உற்றுருங்குத்
துளங்குகுடி விழுத்துணை திருத்தி''.

—பதிற்றுப்பத்து: 31: 11-13

உயர்ந்த குடியில் பிறந்து, யாது காரணத்தாலோ நிலை தளர்ந்துபோன தன் நாட்டவர்க்கு, வேண்டுவ வேண்டுவ எல்லாம் வழங்கி, அவரை நன்னிலைக்கண் நிறுத்துவதற்குக் காரணமாய் இருக்கும், களங்காய்க்கண்ணியானின், வலுவோடு கூடிய விரிந்தகன்ற மார்பிற்கு, மழையில்லாமையால் வறண்டுகிடந்த சேர நாட்டில் சில திங்கள் கிழக்கு நோக்கியும், சில திங்கள் மேற்கு நோக்கியும் செல்லும் மேகங்களைத் தடுத்துப் பெருமழை பெய்யச் செய்து, அந்நாட்டை வாழ வைத்து, வடக்கு தெற்காக நீண்டு கிடக்கும் மேற்கு மலைத்தொடரை உவமையாக்கி இருப்பது இரண்டாவது உவமை.

''துளங்கு குடி விழுத்துணை திருத்தி
ஆண்கடன் இறுத்த நின்பூண்கிளர் வியன்மார்பு
கருவிவானம் தண்டளி தலைஇய
வடதெற்கு விறங்கி விலகுதலைத்து எழிலிய
பணிவார் விண்டு விறல் வரை அற்றே''

—பதிற்றுப்பத்து: 31: 15-17

ஒரு நாட்டு அரணிலிருந்து வெளியேறிப் பகைநாட்டில் பாசறைகொள்ளும் படைக்கு, ஆங்கு அரண் கிடைப்பது அரிது. ஆனல், ஒரு படைக்குப் பாதுகாப்பு அளிப்பது அரண். அரண் இல்லாப்படை அழிந்தே போய்விடும். ஆகவே, சென்ற நாட்டில் ஓர் அரண் அமைத்துக் கொள்வது இன்றியமையாதது. இப் போர்நெறி உணர்ந்தவன் களங்காய்க் கண்ணியான். அதனல், சென்றிருக்கும் பகை நாட்டு மண்ணில், பெருமதில், அம்மதிலைச் சூழ, ஆழ்ந்த அகழி; அவ்வகழியைச் சூழக் காவற்காடு; அக்காட்டைக் காக்கும் முள்வேலி ஆகிய அமைப்புகளைக் கொண்ட, வலுவான அரண் ஒன்றை அமைத்துக் கொண்டான் அவன்,

களங்காய்க் கண்ணியாரொடு களம்புகும் வழக்கம் உடையவராகிய புலவர் காப்பியாற்றுக் காப்பியனார். ஆங்கு அவன் அமைத்திருக்கும் அரண் கண்டு வியந்து போனார்; ஆங்கு, அவன், தன் வாட்படைகளையே மதிலாகவும், கூரிய முனைகளையுடைய விற்படைகளையே அகழியாகவும், வேற்படைகளையே காவல்காடாகவும், அவ்வில்லின்றும் விரைந்து பாயும், அம்புகளையே, அக்காவற்காட்டை வளைத்துக் காத்து நிற்கும் முள்வேலியாகவும் கொண்டு நல்ல தோர் அரண் அமைத்திருந்தான். புலவர், தம் கற்பனைத் திறத்தால், ஓர் அரிய அரண் அமைத்திருக்கும் அருமை, பெருமைப்படக் கூடியதல்லவோ? இது, மூன்றாவது உவமை.

''வரம்பில் வெள்ளம்
வாள்மதிலாக, வேல்மிளை உயர்த்து
வில்விசை உமிழ்ந்த வைம்முள் அம்பின்
செவ்வாய் எஃகம் வளைஇய அகழி.''
—பதிற்றுப் பத்து : 33: 6-9

பொன் தகட்டால் ஆக்கப் பெற்ற ஒரு கூட்டின் மேற்புறம், நார்கொண்டு பின்னப்பட்டு, அந்நாரின் தோற்றம் புறத்தே தோன்றுவாறு, நூலால் கோக்கப்பெற்ற முத்துச்-சரங்கள் கிடந்து அணிசெய்ய, அக்கூட்டின் விளிப்பிலே மணிகள் நாலவிடப்பட்டிருந்தது, களங்காய்க்கண்ணி நார்முடிச்சேரல் அணிந்திருந்தமுடி. அம்முடியில் மேல்புறத்தை மூடியிருக்கும், நார்கொண்டு பண்ணப்பட்ட பின்னலுக்கு, வேலமரத்து உச்சிக்கிளையில், சிலந்தி தன்வாயில் ஊறும் எச்சில் நீரால் பின்னிவிட்டிருக்கும் வலையை உவமையாக்கி இருக்கும் நயமும், வேலமரத்து உச்சியில் தன்வாய் எச்சில் நீரால் பின்னிவிடப்பட்டிருக்கும் சிலந்தி வலைக்கு, புருக்களின் கால்களைச்சிக்க வைத்து அப்புருக்களைக் கவரும் வேடன்

விரித்து வைக்கும் வலையை உவமை ஆக்கி, உவமைக்குமேல் உவமை காட்டியிருக்கும், புலவர் காப்பியாற்றுக் காப்பியனாரின் புலமை நலம் போற்றுவதற்கு உரியது;

''நூலின் இழையா, நுண்மயிர் இழைய
பொறித்தபோலும் புள்ளி எருத்தின்
புன்புறப் புறவின் கணநிரை அலற
அலந்தலை வேலத்து உலமை அஞ்சினைச்
சிலம்பி கோலிய வலங்கற் போர்வையின்
இலங்கு மணிமிடைந்த பசும்பொன் படலத்து
அவிரிழை தைஇ, மின்உமிழ்பு இலங்கச்
சீர்மிகு முத்தம் தைஇய
நார்முடி''

—பதிற்றுப் பத்து: 39: 9-17

போர்க்களத்தில், அச்சமோ, இரக்கமோ அற்றுப் போர்-ஆற்றுவது, சிறந்த வீரனுக்கு ஆண்மை. ''பேராண்மை என்ப தறுகண்'' (குறள்: 773) என வீரனுக்கரிய ஆண்மை இலக்கணத்தையும், பிறன் ஒருவன் மனைவியைக் காமக்-குறிப்போடு நோக்காமை, உலகில் உள்ள ஆடவர் அனைவர்க்கும் ஆண்மை தரும் செயலாம், ''பிறன் மனை நோக்காத பேராண்மை'' (குறள்: 38) என ஆண்மைக்குரிய இலக்கணங்களை, அடுக்கடுக்காக எடுத்து வைத்துச் சென்றுள்ளார் திருவள்ளுவர்.

ஆனால், காப்பியாற்றுக் காப்பியனார், பேராண்மைக்கு ஒரு புது இலக்கணம் வகுத்துள்ளார். வாழ்வும் வளமும் குன்ற, தளர்ந்து போன தன்குடிகளின், அத்தளர்ச்சிகளை அறவே துடைத்துவிட்டு, தன்கொற்றத்தால், தன்கோலாட்சி நலத்தால், அவர்களை வாழ வைப்பதே, அரசர்க்கு ஆண்மை-

யாம் எனக் கூறுகிருர்; இத்தகு ஆண்மையின் சிறப்புணர்ந்த புலவர், அவ்வாண்மையின் இன்றியமையாமையினை, உணர்த்த, ''துளங்கு குடி திருத்திய வலப்படு வென்றி'' எனஒரு தொடரில் சுருங்கிய வாய்பாட்டால் உணர்த்துமிடத்து, ஓரிடத்திற்கு ஈரிடத்திலும் [ (பதிற்றுப்பத்து : 22 :7) : (37 : 7) ]

''துளங்கு குடி விழுத்துணை திருத்தி, முரசுகொண்டு,
ஆண்கடன் இறுத்த நின் பூண்கிளர் வியன் மார்பு''

(பதிற்றுப்பத்து : 31 : 13-14) என்ற ஓரிடமே ஆயினும், இரு வரிகளில் எடுத்து உணர்த்தியிருக்கும் திறம், ஒவ்வொருவர் உள்ளத்திலும், நின்று நிலைபெற வேண்டிய பேரறமாம்,

தமிழகம், நுதல்விழி நாட்டத்து இறையோன், பிறவா- யாக்கைப் பெரியோன், அறுமுகச் செவ்வேள், வால்வளை மேனி வாலியோன், நீலமேனி நெடியோன் முதலாம் பல்வேறு கடவுளர்களின் தெய்வத் திருமேனிகள் இடம் கொண்ட கோயில்கள், பண்டு தொட்டே இருந்து வருகின்றன. அக்கடவுளர், திருமேனிகளில் நீலமேனி நெடியோன் திருமேனி இடங்கொண்டிருக்கும் பல்வேறு இடங்களில், திருவனந்தபுரமும் ஒன்று என்ற உண்மையினை உணரத் துணைபுரிவது பதிற்றுப்பத்து.

தமிழகத்துப் பல்வேறு பகுதிகளைச் சேர்ந்த மக்கள் எல்லாம், கைகள் தலைமேல் கூப்பிக்கிடக்க வாய், தன் பெரும்பெயரை, உலகத்தவர் காதுகள் செவிடுபடப் புகழ்ந்து பாட, வந்துகுழுமியிருந்த நிலையில், திருக்கோயில் திருமணி, வழிபடற்குரிய காலம் இது என்பதை உணர்த்த, கலீல் கலீல் என ஒலிக்கக் கேட்டதுமே, பெருமாளைக் கண்டு வழிபட்ட பின்னர் அல்லது உண்ணேம் என விரதம் பூண்ட,

அவ்வன்பர்கள், கோயிலுக்கு அணித்தாக உள்ள குளத்துக் குளிர்ந்த நீரில் மூழ்கி எழுந்து, கோயிலுள் புக, புகுந்த அவ்வன்பர்கள் திருமகள் வீற்றிருக்கும் மார்பின்மீது, வண்டுகள் வந்து மொய்க்குமளவு தேன்துளிர்க்கும் மணம் வீசும் துளசியைக், கொத்துக் கொத்தாக வைத்துக் கட்டிய மாலைகிடந்து அணிசெய்ய, காண்பவர் கண்களைக் கூசச் செய்யும் ஆழிப்படையைக், கை ஏந்தி நிற்க, தன் திருவடிகளில் வீழ்ந்து வணங்கி, வாழ்த்தி. மனம்நிறை மகிழ்ச்சியோடு விடை பெற்று செல்லும் காட்சி தரும், திருவனந்தபுரத்துத் திருமாலின் கோலத்தைக் காட்டும், பதிற்றுப் பத்தின் பெருமை பாராட்டற்குரியது.

''மண்கெழு ஞாலத்து மாந்தர் ஒராங்குக்
கை சுமந்து அலறும் பூசல் மாதிரத்து
நால்வேறு நனந்தலை ஒருங்கெழுந்து ஒலிப்பத்,
தெள்ளுயர் வடிமணி எறியுநர் கல்லென
உண்ணுப் பைஞ்ஞிலம் பனித்துறை மண்ணி,
வண்டூது பொலிதார்த் திருஞெமர் அகலத்துக்
கண்பொரு திகிரிக் கமழ்குரல் துழாஅய்
அலங்கற் செல்வன் சேவடி பரவி
நெஞ்சுமலி உவகையர் துஞ்சிபெயர''.

—பதிற்றுப் பத்து: 31: 2-10.